# குமரன்

## ஆரம் 3, முத்து 24

## January 27, 1926

Record no. 313

Registered No. M. 1823. உ சிவமயம். "KUMARAN" Karaikudi.

# குமரன்

"என்கடன் பணிசெய்து கிடப்பதே."

(வாரப் பதிப்பு.)

புதன்கிழமை தோறும் பிரசுரமாகும்.

"ஆலயந் தொழுவது சாலவு நன்று."



"திரைகட லோடியுந் திரவியந் தேடு."

ஆர. ரு. } காரைக்குடி, குரோதன ஸு தைமீ கஎஉ (27-1-26) { முத்து. உச

## என்றுமுள தென் தமிழ்.

தமிழ் மக்களது தொன்மை நாகரிகத்தைக் குறித்து இப்போது பலரும் பேசி வருகின்றனர், எழுதி வருகின்றனர். தமிழ் மக்களே உலகிலுள்ள ஆதிமக்களென்றும், தமிழ் நாகரிகமே செம்மை சான்ற தொன்மை நாகரிகமாக இன்றளவும் நின்று நிலவுவதென்றும், தமிழ் மொழியே நாகரிகமுற்ற ஆதிமனிதன் பேசிய இயற்கைமென்மொழி யென்றும் இப்போது நல்லறிஞரிற் சிலர் நம்புகின்றார். "அகத்தியன் பயந்த செஞ்சொலாரணங்கு" என்று ஓதப்பெறினும், தமிழணங்கு அகத்திய முனிவனது தவப் புதல்வியென்பது, தமிழ் வளர்ப்பிற்கு அரும்பாடுபட்ட அகத்தியனைக் குறித்து நம் மக்கள் வழங்கிய முகமனுரையே யாகும். இவ்வுண்மையினை நன்குணர்ந்த கல்வியிற் பெரிய கம்பர் "என்று முள தென்தமிழ் இயம்பி இசை கொண்டான்" என்று கூறி, தமிழ் மொழி என்று முள தென்றும், அதனை ஆராய்ந்து வளர்த்த அரும்புகழே அகத்தியன் புகழென்றும் வற்புறுத்துகின்றார்.

***

அகத்திய முனிவர் காலத்திற்கு முன்னரே தமிழ்மொழி தழைத் தோங்கி வந்தது; தமிழ் மக்கள் நாகரிக மக்களாக வளர்ந்தோங்கினர். அகத்தியர் வடமொழிக் கடலோடு தமிழ்க் கடலையும் பருகினார். இவரால் தமிழ்மொழி இலக்கண வரம்பு பெற்றிலங்கியது. வடநாட்டுத் தவ முனிவர் தம் தமிழ்ப்பற்றால் தமிழ் முனிவரானார். தமிழ் முனிவர் தமிழரசனாகிய பாண்டியனோடு கருத் தொருமித்துக் கலந்து, சங்கம் கண்டு தண்டமிழ் வளர்ப்பாராயினார். இயற்கையோடு பிறந்த தமிழ், இன்ன காலத்தில் பிறந்ததென்று வரையறுத்துக்கூற இயலாத தொன்மை மாட்சி பெற்றுத் திகழ்ந்ததாலன்றோ, கம்பரால் "என்று முள தென் தமிழ்" எனப் போற்றப் பெறுகின்றது! எனினும் இது ஆதியில் மலையிலே பிறந்ததென்றும், மலை நாடுகளிலே வாழ்ந்த பண்டைப் பெருமக்களிடையே திகழ்ந்ததென்றும், மலையமலையிலே அகத்திய முனிவரது 'குருகுல'த்திலே இலக்கணம் பெற்று, பாண்டியர் தலை நகரிலே 'நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமு'மாக வளர்ந்து செழித்தோங்கியதென்றும் தெரியவருகிறது.

***

பண்டைக் காலத்திலே தமிழ் மக்கள் கல்வியின் பயனை நன்குணர்ந்து கொண்டார்கள். கல்வியே மக்களை மக்களாக்குவதென்பது பண்டைத் தமிழ்ப் பெரியார் கண்ட உண்மையே. கல்லாதவர்—கல்வி கேள்விகளால் பகுத்தறிவு பெறாதவர், மக்களல்லர்—மாக்கள், விலங்குகள், என்பது தொல்காப்பியர், திருவள்ளுவர் மதம். 'கல்வி' என்னும் தமிழ்ச் சொல் ஆழ்ந்த பொருள் பொதிந்ததோர் அழகிய சொல்லாக விளங்குகின்றது. இது 'தோண்டு' என்று பொருள்படும் 'கல்' என்னும் பகுதியடியாகப் பிறந்ததாகும். தோண்டத் தோண்ட மணற்கேணியில் நீர் பெருகுகின்றது. அவ்வண்ணமே 'மனக்கேணி'யிலும் தோண்டித் தோண்டி ஆராய்ச்சி செய்யச் செய்ய அறிவு நீர் பொங்கி வெள்ளமிடுகின்றது. இது பண்டைத் தமிழ்க் கல்வியாளர் கொள்கை. இவ்வுண்மையினையே தமிழர் பொதுமறையாகிய திருக்குறள் "தொட்டனைத்தூறும் மணற் கேணி, மாந்தர்க்குக்—கற்றனைத் தூறும் அறிவு" என்று திட்ப நுட்பம் செறிந்ததோர் சூத்திரம் போல அமைத்து வெளியிடுகின்றது.

***

ஆராய்ச்சியால் பெருகும் அறிவுப்புனல் அனைவர்க்கும் உரியதே. இது இன்ன வகுப்பினர்க்கே உரிய சொந்தமல்ல—அனைவர்க்கே உரியதென்பதுமில்லை. ... , குலம், நிறம், மதம் என்ற வேறுபாடுகளின்றி மக்களனைவரும் கல்விப் பயிற்சிக் குரியராவர். ஆராய்ச்சி வாயிலாகத் தோண்டப் பெறும் அறிவென்னும் 'மணற்கேணி' நீர் நிறைந்த ஊருணியாக நின்று ஊரவர்க்கெல்லாம் தாகமும் தாகமும் கெட உதவ வேண்டுமென்பது வள்ளுவர் வாய்மொழி.

ஊருணி நீர் நிறைந்தற்றே உலகவாம்
பேரறிவாளன் திரு—

என்ற பொய்யில் புலவன் பொருளுரையின் பேரழகை வியவாதார் யார்? பேரறிவாளனது செல்வம், பேரறிவு—எல்லாம் ஊரார் உண்டு மகிழும் ஊருணி போல நிறைந்து பொது உடைமையாகப் பொலிகின்றனவன்றோ? ஏனெனில்,

தாம் இன்புறுவது உலகின்புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந்தார்.

என்ற வண்ணம் பெரியோர் தமக்குப் பேரின்பம் அளிக்கும் அறிவுச் செல்வத்தை உலகமெங்கணும் வழங்கி அனைவரும் அறியாமை யிருளினின்று விடுதலை பெற்று இன்ப வாழ்வு வாழ்வதை 'என்று கொலோ, கண் குளிரக் காணும் நாளே'! என்று எதிர்நோக்கியிருப்பார்.

***

கல்வியுடையாரே கண்ணுடையராதலின், ஒவ்வொருவரும் அறிவுக் கண்ணைத் தாய்மொழி வாயிலாகப் பெற்றுய்ய முயலவேண்டும். அன்னையர் தீம்பாலோடு பருகிய அமுத மென்மொழியாகிய நம் தமிழ் மொழியே, நம் நாட்டில் நம் தமிழ் மக்களிடையே அறிவு தழைத்தோங்குவதற்குத் தக்க கருவியாகும். நமது முலதனமாகிய இலக்கியத்தை ஆராய்ச்சி வாயிலாகக் கற்பதோடு பிறநாட்டார் அறிவுச்செல்வத்தையும் தாய்மொழி வாயிலாக அறிந்தின்புறவும் மாணுக்கர்கட்கு வேண்டிய சௌகரியங்கள் இந்நாட்டில் அமைக்கப்பெறவேண்டும்.

## தேவகோட்டை தாலூகா போர்டு.

### புதிய யூனியன்கள்.

தேவகோட்டை தாலூகா போர்டின் விசேஷக் கூட்ட மொன்றில், கண்டனூர் கோட்டையூர்—இவ்விரண்டிடங்களிலுமுள்ள புதிய யூனியன் போர்டுகள் ஒவ்வொன்றும் பன்னிரண்டு உறுப்பினரை உள்ளடக்கியதாக இருக்குமென்றும், இப்பன்னிருவருள் ஒன்பது பேர் தேர்ந்தெடுக்கப் படவேண்டு மென்றும் ஒரு தீர்மானம் நிறைவேறியது.

### பட்டதாரிகளைப் பாராட்டுதல்.

விசேஷக் கூட்டம் முடிவெய்தியபின், தாலூகா போர்டின் உதவித் தலைவரான திருவாளர் எம். ஆர். சேஷய்யர், புதிதாக அரசாங்கத்தாரால் பட்டம் சூட்டி கௌரவிக்கப் பெற்ற திவான் பகதூர் ஏ. எம். முருகப்ப செட்டியார், ராவ்சாகிப் எம். ஆர். சுப்பய்யா செட்டியார் இருவரையும் தாலூகா போர்டு பாராட்டுவதாக, ஓர் தீர்மானம் கொண்டுவந்து நிறைவேற்றினர்-

### சாதாரணக் கூட்டம்.

அப்பால் தாலுகா போர்டின் சாதாரணக்கூட்டம் வழக்கம் போல் நடைபெற்றது. இப்பொழுதுள்ள 'ஹெல்த்' உத்தியோகஸ்தர்களால் தாலுகா போர்டைச் சேர்ந்த பிரதேசங்களை நன்கு கவனிக்க முடியவில்லை யென்றும், இதனால் திருவாடனை 'ஹெல்த்' ரேஞ்சை இருகூறாகப் பிரிப்பது நலமாகுமென்று அரசினர்க்கு விண்ணப்பித்துக்கேட்கவேண்டு மென்றும்' தீர்மானிக்கப்பட்டது.

### காரைக்குடியும் பிரசவ ஆசுபத்திரியும்

காரைக்குடியில் ஒரு பிரசவ ஆசுபத்திரி திறந்து வைக்க வேண்டு மென்ற விஷயம், செலவில்லாமல் ஒரு கட்டிடம் கிடைக்கும் வரையிலும் தாலூகா போர்டின் பொருள் வருமான நிலை அபிவிருத்தியடையும் வரையிலும் ஒதுக்கி வைக்கப்பட வேண்டு மென்று தீர்மானிக்கப்பட்டது.

### தேவகோட்டை யூனியன் ஆபீசு.

தேவகோட்டை யூனியன் ஆபீசைப் பெரிதாக்குவதற்கு ரூபா ரூ.அ00 செல்லுமென்று தயாரிக்கப் பெற்றிருந்த மதிப்புத் திட்டத்தை தாலூகா போர்டார் ஒப்புக் கொள்ளாது மறுத்து விட்டார்கள். வேறு சில மதிப்புத் திட்டங்களுக்கு அனுமதி யளித்துச் சில 'என்க்ரோச்மெண்டு' வழக்குகளை விசாரித்தபின், தாலூகா போர்டுக் கூட்டம் முடிவெய்தியது.

### கூனூர் திரு. ராமன் செட்டியார் வழக்கு.

கூனூர் ராமன் செட்டியார் வழக்கு தஞ்சை சப் டிவிஷனல் மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டிலிருந்து, கட்சிக்காரர்களின் வேண்டுகோளுக் கிணங்கவே, கும்பகோணம் சப் டிவிஷனல் மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டுக்கு மாற்றப்பட்டிருக்கிறது.

### இராமநாதபுரம் சப் கோர்ட்டு.

ஆக்டிங் சப்ஜட்ஜ் திரு. பி. ஆர். கோவிந்த ராவ் மதுரையிலுள்ள இராமநாதபுரம் சப் கோர்ட்டில் ஆக்டிங் சப் ஜட்ஜாக வேலை பார்க்கும்படி உத்தரவிடப் பெற்றுள்ளார் என்று போர்ட் ஸெண்ட் ஜார்ஜ் கெஸட் கூறுகிறது.

### கவுன்ஸில் ஆப் ஸ்டேட் தேர்தல்.

கவுன்ஸில் ஆப் ஸ்டேட் தேர்தலில் வெற்றி பெற்ற ஸர். எம். ஏ. அண்ணாமலை செட்டியார், ஸர் ஸி. சங்கரன் நாயர்—இருவர் தேர்தலையும் ஆட்சேபித்து, திரு. கெ. வி. ரங்கசாமி ஐயங்கார் ஓராட்சேபனை மனு அனுப்பியுள்ளார். ஸர் சங்கரன் நாயரைப் பற்றிய ஆட்சேபனை, காலவரையறை கடந்து தாமதமாய் விட்டதால் உடனேயே அரசினரால் தள்ளப்பட்டது. ஸர். அண்ணாமலை செட்டியாரைப் பற்றிய ஆட்சேபனை மனு கமிஷனர்களால் விசாரணை செய்யப் பெறும். கமிஷனர் பெயர்களைத் தெரிவிக்கும்படி, சென்னை அரசாங்கத்தார் வேண்டிக் கொள்ளப் பெற்றிருக்கின்றனர்.

### போர்ட் சென்ட் ஜார்ஜ் கெஜட் அறிக்கை.

சென்னை கிராமப் பஞ்சாயத்துச் சட்டத்தின் உங (உ) சஉ-வது பிரிவுகளின் படியுள்ள குற்றங்களுக்கு மாஜிஸ்ட்ரேட்டார் விதிக்கும் அபராதங்கள் கிராம பஞ்சாயத்துக்களின் நிதிக்கே சேர்க்கப்படும்.

## புதிய கம்பியில்லாத் தந்தி ஸ்டேஷன்.

உலகத்திலேயே மிக மிகப் பெரிய கம்பியில்லாத் தந்தி ஸ்தாபனம், ரக்பி நகரத்திற்குச் சமீபத்தில் மார்ட்டன் மலையில் பிரிட்டிஷ் தபால் அதிகாரிகளால் கட்டப்பட்டுள்ள புதிய ரக்பி ரேடியோ ஸ்டேஷனே யாகும். இதைப்பற்றி ஆங்கிலப் பத்திரிகைகள் அதிகமாக எழுதி வருகின்றன. இங்கிருந்து 'சூரிய அஸ்தமனத்தை அறியாத' தனியரசு நாடென்று' புகழ்ந்தோதப் பெறும் ஆங்கில ஏகாதிபத்திய உலகமெங்கணும் கம்பியில்லாத் தந்திச்செய்திகள் பறக்கின்றன. இதனைக் கட்டி முடிப்பதற்கு ஐந்து லட்சம் பவுன் செலவாயிற்று. இதன் விஸ்தீரணம் கூ00 ஏக்கர். இதன் தூண்கள் பன்னிரண்டு. ஒவ்வொரு தூணும் அஉ0 அடி உயரம். இந்த ஸ்டேஷனிலிருந்து நாடோறும் இரு முறை தந்திச் செய்திகள் அனுப்பப் பெறுகின்றன.

## ஜீவகாருண்ய பிரசாரம்.

### மைசூர் கவர்ண்மெண்டு.

மைசூர் கவர்ண்மெண்டார் தங்கள் சமஸ்தானத்தில் மிருகபலியை ஒழிப்பதற்குரிய எல்லா முயற்சிகளும் செய்து வருகின்றார். இவ்விஷயமாக மைசூர் அரசினர் பலமான பிரசாரம் செய்து வருகிறார். சமீபத்தில் கவர்ண்மெண்டின் ஆதரவில் கூடிய பொதுக்கூட்டமொன்று மைசூர் தர்க்காதேவி கோயிலில் ஒரு பெரிய உத்தியோகஸ்தர் தலைமையில் கூடியது. அவ்வமயம் மிருகபலிக்கு இந்து சாஸ்திரங்களில் ஆதாரமொன்றுமில்லை யென்றும், இந்துமதக் கொள்கைக்கு மிருகபலி முற்றிலும் விரோதமானதெனறும் பல சொற்பொழிவாளர் விளக்கிக்காட்டினர். முடிவில் மிருகபலி ஒழிக்கப்பெற வேண்டுமென்று தீர்மானங்கள் நிறைவேறின. இங்ஙனம் மைசூர் அரசாங்கம் உத்தியோகஸ்தர் வாயிலாக ஜீவகாருண்யப் பிரசாரம் செய்வது பெரிதும் போற்றத்தக்கது.

### திருவாங்கூர் சமஸ்தானம்.

இச் சமஸ்தானத்து மகாராணியாரும் மிருகபலியை அடியோடு ஒழிப்பதற்குப் பல பயன் தரத்தக்க பெரு முயற்சிகள் செய்து வருகின்றன ரெனக் கேள்வியுற்று, பெருமகிழ் வெய்துகிறோம்.

### புதுக்கோட்டை சமஸ்தானம்.

தமிழரசர் ஆளும் புதுக்கோட்டையிலும் மிருகபலியை நிறுத்த வேண்டுமென்று சட்டசபைக் கூட்டத்தில் ஒரு தீர்மானம் நிறைவேறி யிருக்கிறது. ஆனால் அரசாங்கத்தார் வாய்ச்சொல்லில் அனுதாபம் காட்டியபோதிலும், பொதுமக்களின் விருப்பத்திற்கு விரோதமாக அவர்கள் தலையிட விரும்பவில்லை யென்று அனுஷ்டானத்தில் தெரிவிப்பதாக 'ஜனமித்திரன்' கூறுகின்றது. புதுக்கோட்டை சமஸ்தானமும் மைசூரைப் பின்பற்றி, தக்க உத்தியோகஸ்தர் வாயிலாகப் பிரசாரம் செய்து வாயிலாப் பிராணிகளின் வதத்தை நிறுத்த முற்பட வேண்டுமென்று 'ஜனமித்திரன்' கூறும் யோசனையை நாம் மனப் பூர்வமாக ஆதரிக்கிறோம்.

### ஸர் எம்.சி.டி. முத்தையசெட்டியார்.

சென்னை கார்பொரேஷனில் தென் இந்திய வர்த்தக சங்கத்தின் இரண்டு புதிய பிரதிநிதிகளில் ஸர் எம். ஸி. டி. முத்தையசெட்டியார் ஒருவராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றிருக்கிறார்.

## இங்கிலாந்தும் வியாபாரப் பெருக்கமும்.

ஆங்கில நாட்டுப் பத்திரிகைகள் எதிர்கால வியாபார நிலைமையைப் பற்றி விசேட நம்பிக்கையோடு எழுதுகின்றன. வியாபாரத்தின் பல துறைகளிலும் ஆங்கில நாடு முன்னேறி வருகிறது. சென்ற ஆண்டில் ஏராளமான பணம் புரண்டிருக்கிறது. லண்டன் பாங்கிகளில் ககூஉகு-ல் சௌ௬ங. கோடியே எ0 லட்சம் பவுன் உண்டியல்களும் செக்குகளும் மாற்றப்பட்டிருக்கின்றன. ககூஉச-ல் ஙகூஙங கோடியே ங0 லட்சம் பவுன் தான். சென்ற ஆண்டின் அதிகமான கோடி பவுனுக்கு முக்கிய காரணம் ரப்பர் பங்கு மார்க்கட்டில் ஏற்பட்ட சூடுதான். ஸ்டாக் மாறல்களி (எக்ஸ்சேஞ்சு)ல் ஏற்பட்ட சுறுசுறுப்பும் ஒரு காரணம். கடந்த ஆண்டு காட்டிய நற்குறிகள் புதிய ஆண்டிற்குப் புது நம்பிக்கை விளைக்கின்றனவென அறிவிக்கப்படுகின்றது.



## சில குறிப்புக்கள்.

"மண்டலத்தில் உனக்கென்ன வயிறு ஒருகுதிரா" என்று ஒரு தமிழ்ப் பெரியார் கூறினர். வாஸ்தவந்தானே! மனிதனுக்கு வயிறு ஒரு சாண்தான் இருக்கிறது. அதற்காக ஒவ்வொருவனும் படும் பாடு கொஞ்சமல்ல. பொய் சொல்கிறான். புரட்டு செய்கிறான். மோசம் பண்ணுகிறான். அங்கும் இங்கும் அலைகிறான். மித்திர பேதஞ் செய்கிறான். பணத்தைப் பலரிட மிருந்தும் பொருக்கி— பிடுங்கித் திரட்டுகிறான். ஆனால் கடைசியில் வேறொருவனிடத்தில் மூட்டையாகக் கொடுத்து விட்டு மாண்டுபோகிறான். ஆகத் தொகை கட்டும்போது இவன் அனுபவித்த தென்ன? யோசிக்கும் வேளையில் பசிதீர உண்பதும் உறங்குவதுமாக முடிகிறது. உழக்கரிசிச் சோற்றுக்கு மேல் உண்டவன் யார்? இதற்கேன் மனிதர் இவ்வளவு பாடுபடுகின்றனர்?

*  *  *

"உணவுண்பது உடல் நலத்துக்கு" என்ற உணர்வு பட்டுப் போய்விட்டது. மரியாதைக்கும் கௌரவத்துக்கும் இலைமுன்னர் உட்காருவது வெட்கக்கேடேயாகும். 'கனல்வாதை வந்திடின் அள்ளிப்புசித்து' என்று தாயுமானார்மொழிகின்றார். நமது நாட்டில் பசியையே கண்கண்டபொருளாகப் பெற்றிருப்பாரொருபுறங் கிடக்கின்றனர். ஆனால், பசி யென்பதின்னதென்றே தெரியாமல் மேலும் மேலும் உணவைப் போட்டு அடைத்து வயிற்றைச் சாக்குப் பையாக்கி வருபவரும் பலருண்டு. காலையிலும் நண்பகலிலும் மாலை நேரத்திலும் இராப் பொழுதிலுமாக நான்கு வேளை யுண்பவரநேகர். இன்னும் பலமுறை விசேடக்காரர் வீடுகளில் உண்ண முன்வருகின்றனர். வயிறு என்பது ஒரு யந்திர மென்பதைப் பலர் அடியோடு மறந்தேவிட்டனர். சொற்பமாக எரிகிற நெருப்பில் சொற்பமாக நெய்யை விட்டால் கெட்டுப்போகாது. ஒரு சட்டி நெய்யை அதன் தலையில் ஊற்றினால் என்ன செய்யும்? அல்லது தீபிடிக்கு முன்னர் மாறிமாறி ஊற்றினால் பிடித்தெரியுமோ? கண்டிப்பாக அவிந்து போகுமென்பதில் தடையில்லை. அவ்வாறேதான் மனிதனுடைய உதராக்கினியு மிருக்கின்ற தென்பதை யுணர வேண்டும்.

*  *  *

"அற்றால் அளவு அறிந்து உண்க; அஃது உடம்புபெற்றான் நெடிது உய்க்கும் ஆறு" என்று வள்ளுவனார் வழுத்துகின்றார். இதனைக் கவனிப்பார் யார்? நமது ஜனங்கள் எப்படியாவது சோற்றைப்—பலகாரத்தை—காபியை—எதையாவது நிறைய நிறைய வயிற்றினுள்ளே தள்ளிவிட்டால் வளர்ந்துவிடலா மென்று கருதுகின்றனர். பிள்ளையின் வயிற்றைச் சுற்றி ஒரு நூலைக் கட்டிவிட்டுச் சோற்றைப்போட்டு அடைக்க வேண்டுமென்றும் அந்த நூல் அறுந்துபோனால் தான் சாப்பாட்டை நிறுத்த வேண்டுமென்றும் கூறினொருவர். அந்த நண்பர் பிள்ளையின் வயிற்றில் ஜீரணக் கருவி யொன்றிருப்பதாக அறியார் போலும். தலையணை யென்று நினைத்திருக்கிறார். பாவம்! சில தாய்மார்கள் பிள்ளை அழுகிறபோதெல்லாம் எதையாவது வயிற்றிற் போட்டு அடைக்கிறார்கள். இப்படிப் போடுவதால் பிற்காலத்தில் அஜீரணத்தாற் குழந்தைகள் துன்புறுவதைக் கண்கூடாகக் காணலாம்.

*  *  *

கல்யாணம் முதலிய விசேட காலங்களில் பலகாரம் சாப்பிடச் சொல்வது பெரிய சடங்குபோ லாகிவிட்டது. ஐயோ! விசேடக்காரர் வீட்டிற்குச் சென்று பலகாரஞ் சாப்பிடாமல் திரும்பி வருவதென்றால் அப்பா! அது ஒரு லேசான காரியமன்று. அவர்கள் மேல் தப்பன்று! அப்படி உபசாரம் செய்யாவிட்டால் மதிப்பாக இருக்கவில்லை. சாப்பிட்ட உடனே மறுபடியும் கௌரவத்திற்காக இலை முன்னர் உட்காருவதற்குப் பொருளுண்டா? மனிதன் எதற்காகச் சாப்பிடுகிறான்? ஏன் சாப்பிட வேண்டும்? என்ற கேள்விகள் மறந்து போகாமல் இருக்குமானால் இப்படிப் பட்ட துன்பத்தைத் தரத்தக்க உபசாரம் தலையெடுத்திருக்குமோ?

*  *  *

"ஒருவனுக்கு விருந்து வைப்பதை விட அவனைக் கொன்றுவிடுதல் நல்லது" என்று மகாத்மா கூறியுள்ளார். தன்னுடைய உடல்நிலை யறிந்து தன்னுடைய பின்வாழ்விற் கேற்பத் தினந்தோறும் உணவு கொள்ளுதல் வேண்டும். விருந்து நடக்குமிடங்களில் உண்பதென்றால் கடைசியில் வயிற்றைத் தடவாது வீடு செல்பவர் அருமையாகவே இருப்பர். பலவகையான உணவுகள் தயாரிக்கப்பெற்றிருப்பதால் அவைகளில் கொஞ்சங் கொஞ்சமாகத் தின்றாலும் ஒரு மூட்டை சேர்ந்து உள்ளே போய்விடுகிறது. உபசாரம் ஒருபுறம், உணவின் சுவை மற்றொருபுறம். வேறு வேறு மாதிரியில் செய்யப்பட்டிருப்பது வேறொருபுறம். எல்லாஞ் சேர்ந்து இலை முன் இருப்பவனுடைய அறிவை மூடி ஏமாற்றிவிட்டு உள்ளே சென்றுவிடுகின்றன. எல்லாம் முடிந்தபின்னர் எழுந்துசெல்ல முடியாமல் முக்குகிறான். பின்னர் கீழே கிடந்து புரளுவதும், சுருட்டைக் குடிப்பதும் முதலியவேடிக்கைகளைச் செய்யவேண்டி யிருக்கிறது.

*  *  *

"நாவுக்காக உண்ணாதே; வயிற்றுக்காக சாப்பிடு" என்பது காந்தி திருவாக்கு. மனிதரிற் பெரும்பாலார் வயிற்றை மறந்து விடுகிறார். நாக்கின் ருசிக்காகவே விதவிதமான சுவை யுணவு தேடி யலைகிறார். "கனியேனும் வறிய செங்காயேனும் முதிர்சருகு கந்த மூலங்களேனும்" அகப்பட்ட ஏதாவதொன்றைப் புசித்துப் பசியைத் தொலைத்தல் வேண்டுமென்பது தாயுமானார் கூற்று. பசிக்கு ஏதாவது போடாமல் தீராது. ஆனால் இதுபோது மக்கள் அப்படி எண்ணவில்லை. நாவுக்கு எது ருசியாக இருக்கிறதோ அதனை அளவு கடந்து உண்டுவிட்டு வருந்துகின்றனர். தற்போதுள்ள மக்களில் பலர் அஜீரண நோயால் அல்லலுறுதற்குக் காரணம் இதுவே யாகும்.

*  *  *

"மென்று விழுங்கி" என்று பட்டினத்தடிகள் கூறுவாராயினர். உணவை நன்றாக மென்று உள்ளே தள்ளவேண்டும். வாயில் அள்ளி யெறிந்து மடக்கென்று விழுங்கி விடுவதால்தான் நீரிழிவு முதலிய நோய்கள் வருகின்றன வென்று மருத்துவர்கள் கூறுகின்றனர். வாயினுள் ஆகாரம் சென்றபின்னர் தொண்டைக்கு மட்டும் வேலை கொடுப்பது பாரபக்ஷமே யாகும். பல் முளைத்திருப்பதனை மறந்துவிடலாகாது. தொண்டைக்கு முன்னாலேயே பல் இருக்கின்றதன்றோ? மேலும், மெல்லும் போது ஜீரணிப்பதற்குப் பேருதவி செய்கின்ற உமிழ்நீர் பெருகுகின்றது. அதுவும் ஆகாரத்தோடு செல்வதால் விளையும் பெரும்பயனைப் பலர் உணரவில்லை. உமிழ்நீரோ மனிதனுக்குச் சிறந்த தேவாமிர்தமாக இருக்கின்றதென்பதை மறந்துவிடக்கூடாது.

*  *  *

"அப்பா வாயிலேதானடா பல்லிருக்கிறது; குடலில் இல்லையடா" என்று ஒரு மேனாட்டுப் புலவர் சொன்னாராம். மெல்லவேண்டிய வேலை வாயிலேயே நடைபெற வேண்டும். வயிற்றினுட் சென்றபிறகு நடைபெறுமலே போகின்றது. காலஞ்சென்ற ஸ்ரீமாந் வ. வெ. ஸு. ஐயர் தமது ஆசிரமத்திலுள்ள பிள்ளைகள் உண்ணும்போது கறிகளில் தேங்காயை நறுக்கிப்போட்டு வைப்பது வழக்கமாம். தேங்காய்த் துண்டுகளை மெல்லாமல் விழுங்கிவிட முடியாதாதலால் எப்படியும் குழந்தைகள் மென்றே தீர்க்கவேண்டி யிருந்ததாம். மென்று மென்று விழுங்குவதென்று ஆரம்பித்தால் அளவு கடந்த உணவு உள்ளே போகமுடியாது. ஆனால் பொறுமை வேண்டும். கண்ணிலிருந்து நீர் கொட்டும்படியாக விழியை விழித்துக் கொண்டும், ஆய் ஊய் என்று நாக்கைச் சப்பிக் கொண்டும், அவஸ்தைப்பட்டுச் சாப்படுகிற பலமான மிளகாய்ச் சாப்பாட்டுக்கும் இந்த வேலைக்கும் சிறிது சண்டையுண்டாகிவிடும். மிளகாயை அதிகமாக உபயோகிப்பதால் உணவு அளவு கடந்து ஏறிவிடுவதுங் குறிப்பிடத்தக்கதாகும்.

## ஓர் கொலை.

சென்ற வியாழக்கிழமை அன்று மாலையில் கானாடுகாத்தானி லிருந்து கொத்தமங்கலத்துக்கு தபால்களைக்கொண்டு போகும் ரன்னரை யாரோ சிலர் ஒரே வெட்டாக தலைவேறு, உடல் வேறாகச் சீவி விட்டுத் தபால் பையையும் கொண்டு போய்விட்டார்கள். அப்பையில் இன்ஷியூர் கடிதங்கள் சுமார் ரூ. கரு00 வரை இருந்தன வென்று தெரிய வருகிறது. அதில் நமது குமரனும் இருந்ததாகத் தெரிய வருகிறது. ஆதலால் கொத்தமங்கலத்திலுள்ள நமது சந்தாதாரர்கள் சென்ற வாரப் பத்திரிகையை திரு. ராம. சுப்பிரமணியன் செட்டியாரிடம் பெற்றுக்கொள்ள வேண்டுகிறோம்.

நாளென் செயும்! வினைதானென் செயும்! எனைநாடிவந்த
கோளென் செயும்! கொடுங்கூற்றென் செயும்! குமரேசரிரு
தாளுஞ் சிலம்பும் சதங்கையும் தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்குமுன் னேவந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.

குமரன், காரைக்குடி.
குரோதன ஞு தைமீ ௧௪௳.

## தமிழர் பல்கலைக்கழக மகாநாடு.

தமிழ் மக்களுக்குத் தனியாக ஒரு பல்கலைக்கழகம் வேண்டுமென்ற ஓர் முயற்சி இப்பொழுது கொஞ்சகாலமாக நடைபெற்று வருவதை நண்பர் பலரும் நன்கறிவர். பல்கலைக் கழகத்தின் நோக்கம் ஆகியவற்றை ஆராய்வதற்காகவும் பரப்புவதற்காகவும், திருச்சி நகரில் தமிழர் பல்கலைக்கழக மகாநாடொன்று, வளர்நெறி யமைச்சர் கனம் ஸர். டி. என். சிவஞானம் பிள்ளையின் தலைமையில் கூடியது. ஆங்கிலக் கல்லூரி ஆசிரியர் பலரும் சென்னைச் சட்டசபை யுறுப்பினர் சிலரும் பிரசன்னமாயிருந்தனர். ஸர் தேசிகாசாரியார் ஸர் சிவஞானம்பிள்ளைக்கு வழங்கிய முகமனுரைக்குப் பின், தலைவரது முகவுரை யுபந்யாசம் நடைபெற்றது.

கல்விப் பயிற்சியை அனைவர்க்கும் பொது உடைமையாக்க வேண்டுமென்பதே நமது குறிக்கோளென்றும், தற்போதைய கல்வி முறைகள் சீர்திருத்தி யமைக்கப்பெற வேண்டுமென்றும், மனப் பயிற்சியோடு தொழிற்பயிற்சியும் அவசிய மாகுமென்றும்; ஆரம்பக் கல்வியோடு உயர்ந்த படிப்பும் வேண்டுவோர்க்கு வேண்டும் வண்ணம் அளிக்கப்பெற வேண்டுமென்றும், அமைச்சர் கூறிய விஷயங்களில் விசேட அபிப்பிராய பேதத்திற்கு இடமில்லை. எனினும் பெண்மக்களுக்கெனத் தனிப் பள்ளிகள் அமைத்தல் இயலாத காரியமென்று மந்திரியார் கூறுவது, தற்காலத்தில் நமது சமூகமிருக்கும் நிலையில் பெண்கல்வியை மேலோங்கி வளர்க்கும் ஆலோசனையன்று. மாணக்கர்க்கு, தேசத்திற்காக அருந்தியாகம் புரிந்து பாடுபட்ட பெரியோர்களின் நற்சரிதை வாயிலாக, தேசபக்தி புகட்ட வேண்டுமென்று, மந்திரியார் கூறும் கூற்று, அதிகாரச் சிறு தெய்வங்களாலும் பெருந்தெய்வங்களாலும் எவ்வாறு ஆதரிக்கப்பெறும் என்பது எமக்கு விளங்கவில்லை.

வளர்நெறி யமைச்சரது அரசியல் கொள்கைகளோடும் வேறு கொள்கைகளோடும் நமக்கு எவ்விதமான கருத்து வேற்றுமைகள் இருப்பினும், தமிழ் மந்திரியாரது தமிழ்க்காதலை நாம் வாயார வாழ்த்துகின்றோம். ஆங்கில மொழி போல்,நந்தாய் மொழியுமெத்தகை யகல்விக்கும் ஏற்ற கருவியாகுமோ எனஐயுறுவோர்க்கு,செந்தமிழின் பெருவளத்தைக் குறித்த நம் மந்திரியாரது நல்லுரையினை வழங்குகின்றோம். ஆங்கிலம் தமிழ் இவ்விருமொழிகளையும் ஒருங்கே ஒரே வித ஊக்கத்தோடு பயின்று பல்லாண்டுகளாக ஆழ்ந்து ஆராய்வோர்க்கே தமிழின் வளமும் வனப்பும் இனிது புலனாகும். "ஆங்கில இலக்கியத்தின் அதி யுன்னத அம்சங்களை ஒத்திருப்பவை தமிழிலக்கியத்திலுமுள்ளன. மேலும் நந் தமிழிலக்கியம் ஆங்கில இலக்கியத்தைஇயற்றிய அறிவாளர் தோன்றுவதற்கு முன்னரே, தோன்றியது; ஆங்கிலத்தையும் வென்றுவிடும் அற்புதங்கள் தமிழிலக்கியத்தின் அகத்தே தோன்றித் திகழ்கின்றன. கம்பராமாயணம் உருக்காட்டு படலம்—'சீதையின் தனிமொழி'—ஆங்கில கவிச்சக்கரவர்த்தியான ஷேக்ஸ்பியரது 'இருப்பதா, இறப்பதா?' என்று தொடங்கும் ஹாம்லெத்தின் தனிமொழியழகை முற்றிலும் வென்றுவிடுகின்றது. இன்னும் ஷேக்ஸ்பியர் நாடகத்தில் நம் உளங்கவரும் அந்தோனியின் வாக்குவளத்தை, அநுமனது சொல்வன்மை ஜயித்துவிடுகின்றது. ஆங்கில மகாகவியான மில்டனையும் கம்பன் வென்றுவிடுகின்றான். மேலும் திருக்குறள், புறநானூறு, அகநானூறு பத்துப்பாட்டு முதலான நூல்களும் கவிச்சுவையில் ஆங்கில இலக்கியங்களுக்கு இளைத்தனவல்ல." இவ்வாறு தமிழமைச்சர் தமிழ்ப்பற்றோடு கூறும் நல்லுரை, தமிழ்ப் பற்றில்லாது, ஆங்கில மோகத்தில் அமிழ்ந்துபோயிருக்கும் மேதாவிகளால் நன்கு சிந்திக்கத்தக்கது.

தமிழின் போற்றலுக்குத்தக்க சான்று தமிழிலக்கியமே யாகும். தமிழிலக்கியத்திலன்றோ, செந்தமிழ்ப் பெரியாரது ஜீவநாடி 'துடிதுடி'க்கின்றது; அன்னார் புகழுடம்பு இன்றும் நின்று நிலவுகின்றது! தமிழெனும் உயர்தனிச் செம்மொழியின் மாண்பே தமிழிலக்கியமாகத் தழைத்தோங்கி நிற்கின்றது! இன்று தமிழ் பேசும் இருகோடி மக்கள் நம் தமிழிலக்கியச் செல்வத்திற்கு நல்லுரிமை வாய்க்தவராயிருக்கின்றார். இவ் இலக்கிய அறிவை ஆராய்ச்சி வாயிலாகப் பரப்புவதோடு, புதிய கலைகளையும் தமிழர் பல்கலைக்கழகம் வளர்க்க ஒருப்படல் வேண்டும்.

## எண்டிசைக் காட்சி.

### தண்ணீர் வசதி.

இப்பகுதியிலுள்ள ஊர்களிற் பெரிதாக இருப்பன காரைக்குடியும் தேவகோட்டையுமாகும். இவ்விரண்டு ஊர்களிலும் குடி தண்ணீர் வசதி மிகக் குறைவாக இருக்கின்றது. பூச்சியும் புழுவும் நிறைந்த நீரைக்குடித்து நோய்க்கடலில் ஜனங்கள் குளித்து நிற்கின்றனர். மனிதருக்கு வேண்டிய முக்கியப் பொருள்களுள் நீருமொன்றாகு மென்பதை ஈண்டுள்ளார் உணர்தல் வேண்டும். நாடு கடந்து லட்சக் கணக்கான பொருளை வாரியிறைத்து தருமஞ் செய்யும் கனவான்களின் மனம் இந்த ஒப்பற்ற தருமத்தை நோக்கவில்லையோ? எங்கெங்கோ சென்று சத்திரஞ் சாவடிகளை வீணுகக் கட்டிவைப்பதை விட உள்ளூரில் பல்லாயிரக் கணக்கான மக்களது உடல் குளிர நீரூட்டுவது கோடி பங்கு மேலானதென்று கூறவேண்டியதில்லை. இத்தருமம் செய்யப் பெற்றால் பதினாயிரக் கணக்கான மக்கள் நோயினின்றும் விடுபடுவர். சுக தேகிகளாக வாழ்ந்திருப்பர். இவ்வழியில் தனிகர்கள் முயலல் வேண்டும். ஒருவரே இக்காரியத்தைச் செய்யும்படியான ஆற்றல் பெற்றவர் பலர் இவ்வூர்களில் இருக்கின்றனர். மனமுண்டானால் நாளையே ஈண்டு வதியும் மக்கள் யாவரும் நல்ல நீருண்ணுமாறு அவர்கள் செய்தல் கூடும். இச்சந்தர்ப்பத்தில் இவ்விரண்டு ஊரின் தண்ணீர்க் கஷ்டத்தை யுணர்ந்து அரசாங்கத்தாரும் உதவிபுரியுங் குறிப்பை யுணர்த்துகின்றார்களென்பதும் ஈண்டுக் குறிப்பிடத் தக்கதாகும்.

### குன்றக்குடியில் — — ஆடுகள் பிழைத்தன.

குன்றக்குடியில் தைப்பூச விழா மிகச் சிறப்பாக நடைபெறுகிறது. இன்று ரதோற்சவம். ரதத்திற்குச் சுமார் பத்து ஆடுகள் பலிகொடுப்பது வழக்கமாம், இன்று சிவநேசர் திருக்கூட்டத்தாரின் முயற்சிக்கு ஸ்ரீலஸ்ரீ தம்பிரானவர்கள் ஏஜண்டு முதலிய யாவருமே இணங்கி ஆயிரம் தேங்காய்கள் சிதறுகாயாக உடைக்கப்பெறுகின்றன. நான்கு மூலைகளிலும் பூஷணிக்காய்கள் உடைக்கப் பெற்றன, எம்பெருமான் முருகக்கடவுளின்முன்னர் அவரது வாகனமாக நின்ற ஆட்டினத்தைவெட்டிச்சாய்க்கும் வழக்கமானது நிறுத்தப் பெற்றதற்கு யாவரும் மகிழ்ச்சியுறுவார்களென்று கூற வேண்டியதில்லை.

### பர்மாவில் இந்துக்கள்.

பர்மா மாகாணத்திலுள்ள இந்துமக்கள் தாம் கட்டுப்பாடு பெறுவதற்கு இன்றியமையாத ஓர் இந்து மகாசபை கண்டு, சமய சமூக வளர்ச்சிக்காகப் பாடுபட முற்படுவதை குறித்து மகிழ் வெய்துகின்றோம். இவ் இந்து மகாசபையின் ஆதரவில் கூடிய முதலாவது மகாநாடு எமது நம்பிக்கையை இன்னும் அதிகரிக்கச் செய்கின்றது. பர்மாவிலுள்ள இந்துமக்கள் தமது சமயத்தையும் சமூகத்தையும் கால வகைக் கேற்ற வண்ணம் சீர்திருத்தி வளர்த்த பெரியோர்களையும் வீர புருஷர்களையும் போற்றுதல் வேண்டும். அவர்கள் முற்கால வீரர்களை வழிபடுவதோடு அமையாது, புதிய இந்தியாவின் புண்ணிய மூர்த்திகளான திலகர் விவேகானந்தர் அரவிந்தர் மகாத்மா காந்தியடிகள்—ஆதியாக அழியாத ஆண்மையினையும் பொன்னேபோல் போற்றுதல் வேண்டும். இதற்கு ஓர் அறிகுறியாகத் தங்கள் மகாநாட்டிற்கு அமைக்கப் பெற்றிருந்த அழகிய பந்தரில், நவ இந்தியாவின் இணையிலா மகான்களது திருவுருவப்படங்கள், கண் கவர் வனப்பினவாக ஆங்காங்கே அமைந்திலங்கினவாம். திலகர் முதலானோர் தேசீய வாதிகள்; அரசியல் வாதிகள்; சமூக வளர்ச்சிக்கும் அரசியல் கிளர்ச்சிக்கும் சம்பந்தமில்லை என்று கூறுவதில் பொருளேயில்லை. அரசியலும் சமய சமூக நிலையும், உடம்பும் உயிரும் போல ஒன்றோடொன்று தொடர்புடையன என்பதை மறத்தல் அறியாமையே.



### பர்மா இந்தியரும் சமய போதனையும்.

பர்மா இந்து மகாநாட்டில் தலைமை வகித்த பாஞ்சாலச் சிங்கம் லாலா லஜபதி ராய் சமய போதனையின் அவசியத்தை வற்புறுத்தினர். இந்துக்கள் பன்னெடு நாளாகவே ஒரு சமூகத்தினராயிருக்கின்றனர் என்றும், நமது நாட்டிலுள்ள மதபேதங்களெல்லாம் இந்து சமயத்தின் உட்பிரிவுகளேயென்றும் லஜபதி கூறினர், "இராமாயணமும் மகாபாரதமும் இந்துக்களுக்கு ஊக்கத்தையும் உற்சாகத்தையும் ஞானத்தையும் அளிக்கத்தக்கன. இராமபிரானது வீரத்திருக்கதையால் ஞானமடையாத எந்த இந்துவாவது உண்டா? இத்தகைய புத்தகங்களைப் படிப்பதால் இந்துக்கள் தங்கள் முற்கால மகிமைகளை அறிவதோடு வருங்கால முன்னேற்றத்திற்குப் புதிய சக்தியையும் பெறுகின்றனர். இத்தகைய நூல்கள் நமது பண்டைப் பெருமையின் சாசனங்கள்; எதிர்கால வளர்ச்சிக்குரிய விதைகள். இம்மாகாண இந்து மக்களிடையே, இராமாயணத்தையும் மகாபாரதத்தையும் உபந்யாச வாயிலாகவும் வேறு வழிகளாலும் பரப்பல் வேண்டும்', இவ்வாறு லஜபதி கூறுவதை நாமும் ஒப்புக்கொள்கிறோம். ஆனல் பர்மா மாகாணத்து இந்து மக்களில் பெரும்பாலார் தென்னிந்தியர்களே என்று வரவேற்புக் கழகத் தலைவர் எடுத்துக் காட்டுவதை நாம் மறத்தல் நன்றன்று. ஆகையால் தமிழிலக்கிய வாயிலாக பர்மா மாகாணத்திலுள்ள இந்து மக்களிடையே உயரிய லட்சியங்களைப் பரப்புவதும் உண்மையான மதபோதனையேயாகும் என்று நாம் கருதுகிறோம்.

## உள்ளூர்ச் செய்தி.

காலநிலை:—சென்ற நான்கு நாளாக மழை பெய்துகொண்டிருக்கிறது.

திருக்குறட்கழகம்:—சென்றஞாயிற்றுக் கிழமை, "இன்னா செய்யாமை" என்னும் அதிகாரம் ஆராயப்பட்டது.

மாணவர் சங்கம்:—முத்துப்பட்டணம் மாணவர் சங்கத்தில் திருவாளர் அரு. சோமசுந்தரச் செட்டியார் "வாலிபர் முன்னேற்றம்" எனும் பொருள்பற்றி ஒரு சொற்பொழிவு செய்தார்.

## தந்திச் செய்தி.

சைகோன், தைமீ ௧௩௳

சென்னை உண்டியல் விலை நூற்று ஐம்பத்தாறு.

சிங்கப்பூர் வட்டம் ஒன்று.

பினங்கு, தைமீ ௧௩௳

சென்னை உண்டியல் விலை நூற்று ஐம்பத்து நான்கு.

ஈயம் விலை நூற்று முப்பத்தெட்டு.

ரப்பர் விலை நூற்று நாற்பத்தாறு.

கோப்புடையம்மன் புறப்பாடு:—சென்ற வெள்ளிக்கிழமை தைச்சுக்கிர வாரத்தை முன்னிட்டு அம்மனுக்கு ஊஞ்சலுற்சவம் நடைபெற்றது. பிறகு இரவு நகரைச்சுற்றி திருவுலா நடைபெற்றது. நாளிது மாதத்தில் பிரதி சுக்கிரவாரமும் இம்மாதிரி நடைபெறுமென்று தெரிகிறது.

அவதூறு வழக்கு:—ஊழியன் மீதுள்ள அவதூறு வழக்கு, ஜில்லா மாஜிஸ்திரேட்டின் ஸ்டே ஆர்டர் காரணமாக நாளிதுமீ ௧௨௳ வாய்தாவில் விசாரிக்கப்படவில்லை. நாளிது மாசி மீ ௩௳ தேவகோட்டையில் மறு வாய்தா ஏற்பட்டிருக்கிறது. இதற்கிடையில் ஜில்லா மாஜிஸ்டிரேட்டிடம், வேறு கோர்ட்டுக்கு வழக்கை மாற்ற வேண்டுமெனக் கொடுத்த மனுவுக்கு நாளிது தைமீ ௧௩௳ வாய்தா ஏற்பட்டிருக்கிறது.

### ஆடு பிழைத்தது.

அரிமழத்தில் மாரியம்மன் கோவிலுக்காகச் செய்யப்பெற்ற வயிரத்தேர் நாளிது தைமீ ௨௳ யன்று வெள்ளோட்டம் விடப்பெற்றது. இந்தத் தேர் ஸ்ரீமான் பழ. வ. மு. வயிரவன் செட்டியாரவர்களால் அழகாகச் செய்யப்பெற்றிருக்கிறது. இதன் வெள்ளோட்ட காலத்தில் ஆடு பலிகொடுக்க வேண்டுமென்று ரதஞ் செய்த குன்றக்குடி ஆசாரி வெகுவாக முயன்றார். மெய்யன்பர் சிலர் அது மகா பாதகச் செயலாகுமென்று கூறினர். கடைசியாக ஆட்டினுடைய காதை மட்டும் அறுத்து இரத்தபலி காட்டுவதென்று முடிவு செய்யப்பெற்றது. முடிவு ஒருபுறமிருக்க, ஆசாரி பெண் மக்களிடத்தில் சென்று, "ஆடு வெட்டாததால் வருகிற விஷயம் ரதஞ் செய்த ஆசாரிக்கும் செய்து வைத்தவர்களுக்குமேயாகுமென்றும், மற்றவர்கள்சொல்வதைக் கேட்கப்படாதென்றும்" கூறினராம். பின்னர் தாம் பிடாரி அம்மன் கோவிலில் திருவுளங் கேட்டதாகவும் ஆடு வெட்டும்படியே சுவாமி கூறிவிட்டதாகவும் ஒரு புளுகும் புளுகினராம். மறுபடியும் ஆடு வெட்டத் தீர்மானித்ததைக் கேட்ட அன்பர்களது முயற்சி

யின்பேரில் நகரத்தார் நாட்டார் ஐயர்மார் முதலியோர் சென்று மாரியம்மனிடத்தில் பூ வைத்துப்பார்த்ததில் "ஆட்டின் கழுத்தையும் அறுக்கக் கூடாது: காதையும் நறுக்கக்கூடாது ; தேங்காய்தான் உடைக்க வேண்டும்" என்று பூ வந்தது. பின்னர் அப்படியே ரதம்வெள்ளோட்டம் ஆரம்பிக்கப் பெற்றது. என்றாலும் இந்த ஆட்டுவேட்டை ஆசாமிகளின் சூழ்ச்சியால் பழய சிறிய கயிறு போட்டு இழுகக்ப்பெறவே வடக்கயிறு அறுந்து விட்டது. உடனே ஆசாமிகள் கிளம்பி விட்டனர். பின்னர் அறிவாளிகள் வேறு பலமான கயிறுபோட்டு இழுக்கவே மங்களகரமாக ரதம் நிலைக்கு வந்து சேர்ந்தது. இந்த ஆசாரிக்கு யமலோகத்திலிருந்து எதாவது பென்ஷன் வருகிறதோ என்ற சந்தேகமுண்டாகிறது. எப்படியானலும் ஆடு பிழைத்ததைப்பற்றி சந்தோஷமடைய வேண்டியதவசியம். என்று ஒருவர் அறிவிக்கிருர்.

---

## ஷண்முகநாதபுரம்.

இவ்வூருக் கருகிலுள்ள சுண்டானதர்மத்தில் சென்றவாரம் குறிப்பிட்டிருந்தபடி நாளிது மீ ௧௨௨ மாலை மகாத்மா காந்தியடிகளார்க்கு ஆலயம் ஒன்றமைத்து கிருகப் பிரவேசம் நடந்தேறியது. இதை முன்னிட்டு திரு. பிச்சப்பா சுப்பிரமணியச் செட்டியாரவர்கள் நீண்ட நேரம் 'அன்பு' 'கட்குடியாமை' தீண்டாமை' 'ஒழுக்கம்' முதலியவற்றைப் பற்றி விரிவாகவும், அழகாகவும் சொற்பொழிவு நிகழ்த்திஞர்கள். பின்னர் ராம. நாகப்பன் அவர்கள் சிறிது நேரம் பேசிஞர்கள் என்று ஒரு நிருபர் எழுதுகிருர்.

---

## திரு. அரு. கா. முத்தையாசெட்டியா ரவர்களுக்கு உபசரிப்பு.

அரண்மனை சிறுவயல் திருவாளர் அரு. கா. முத்தையசெட்டியாரவர்கட்கு மலாய்நாட்டரசாங்கத்தார் சமாதான நீதிபதி பட்டமளித்ததை முன்னிட்டு நிகழும் குரோதன ஆண்டு கார்த்திகைத் திங்கள் இருபத்தேழாம் நாள் சனிக்கிழமை பகல் மூன்றுமணிக்கு மேல் பாரபந்தா அரசாங்கக் கல்லூரியில் பாரபந்தா நகரத்தார் ஒரு கூட்டம் கூடிஞர்கள். அதுபோழ்து மலாய்நாட்டின் பல பாகங்களிலு மிருந்து தனவைசிய சகோதரர்களும் இந்திய கனவான்களும் யாழ்ப்பாணத்து கனவான்களும் விஜயஞ் செய்திருந்தனர். உயர் திருவாளர் பொன்னம்பலம் அவர்கள் தலைமையில் பாரபந்தா நகரத்தார் சார்பாக திருவாளர் மு. அ. சு. பழ. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள், ஓர் உபசாரப் பத்திரத்தைவாசித்துக்கொடுத்தனர். திருவாளர் அரு. கா. முத்தையசெட்டியார் தக்க மறுமொழி கூறியபின், திருவாளர் மகிபாலன்பட்டி மு. சின்னையா செட்டியார், திரு. முத்தையாசெட்டியார் அங்கிருந்தபடியே அரண்மனை சிறுவயலிலும் பாகனேரியிலும் இரண்டு பாடசாலைகள் ஏற்படுத்தியதைக் குறிப்பிட்டார்.

## சிதம்பரம் நந்தனர் பாடசாலை.

அப்பால் திருவாளர் அரு. கா. முத்தையா செட்டியார் ஜே. பி. சிதம்பரம் நந்தனர் பாடசாலை விஷயமாக எழுதியிருந்த கட்டுரை படிக்கப்பெற்றது. அதில், சுவாமி சகஜானந்தரது உத்தம கைங்கரியங்கட்கு உதவிசெய்ய வேண்டுமென்று வேண்டப்பெற்றிருந்தது. பிறகு திரு. செ. ராம. சிதம்பரம்செட்டியார் திரு. முத்தையாசெட்டியாரவர்களின் குணதிசயங்களையும், நந்தனர் பாடசாலைக்கு உதவிபுரிய வேண்டுமென்பதையும் வற்புறுத்திஞர்கள்.

---

## அகில இந்திய நூல் நூற்பவர் சங்கம்.

96 டீ. எம். ராமகிருஷ்ணய்யர் சோழவந்தான்.
303 எம். எம். மணிஐயர் மதுரை.
309 என். எம். கிருஷ்ணமாச்சாரி ,,
310 கே.வி.ஆர். கோபாலாச்சாரி ,,
311 பி. சேஷாச்சாரி ,,
312 ஆர். எஸ். வேங்கட்டராமஐயர் ,,
313 சி.சின்னசாமிஐயர் சோழவந்தான்
314 எம். ஆர். சுவாமிநாதய்யர் புதுக்கோட்டை.
315 ஏ. ஏ. வேங்கட்டராமன் ,,
816 எஸ். சாம்பசிவம் ,,
317 கே. ஆர். முத்துலட்சுமி அம்மாள் மதுரை.
318 எஸ். இருளாண்டிசேர்வை ,,
319 ஏ. பழனியாண்டிபிள்ளை ,,
320 எஸ். மாரியப்பன் ,,
321 கே. ஆர். சீனிவாசய்யங்கார் ,,
322 ஆர். கிருஷ்ணய்யங்கார் ,,
323 பி. சுந்தரராஜு சேர்வை ,,
324 ஏ. பொன்னுத்தாயம்மாள் ,,
325 எம். எஸ். சேஷய்யங்கா ,,
326 ஜானகிஅம்மாள் சிதம்பரம்.
327 ஐ. பி. ஆர். ஆவுடையம்மாள் ராஜபாளையம்.
328 எஸ். அம்புஜம் கும்பகோணம்.
329 கே. ஆர். கே. செட்டியார் சிதம்பரம்.
330 வேதநாயகய்யா ,,
331 சி.எஸ்.சடகோபாச்சாரியார் ,,
332 பார்வதி தேவி ,,
333 நபானியப்பன் ,,
334 டீ. எச். அருணசல ஐயர் ,,
335 ஏ. பாலகிருஷ்ணநாயுடு தூத்துக்குடி.
336 கே. எஸ். சோமசுந்தரம் பிள்ளை ,,
337 சி. வீரபாகு ,,
438 ராமாமிர்தம்மாள் மல்லியம்.
339 எஸ். பிரணதார்த்திஹரன் சாத்தூர்.
340 எம். ஆர். சுப்பராயசர்மா ஆத்தூர்.
341 கே. நீலகண்டசாஸ்திரி காஞ்சீவரம்.

---

## உ. சிறுவயல்.

இவ்வூரில் ஸ்ரீபொன்னழகியம்மன் கோவிலில் வருடா வருடம் வகைக்கொருவராக டிரஸ்டி பார்த்து வருவதில் மனவேற்றுமைப்பட்டு நகரத்தாரவர்களுக்குள் ஒற்றுமைக் குறைவேற்பட்டுப் பதினன்கு வருடக்காலமாக விவகாரங்கள் குறைவு படாமல் அதிகரித்து நீதி மன்றத்தில் வழக்காடி அவரவர்களுக்கு வேண்டியவாறு நியாயமும் கிடைத்து இருக்கிறது. அதில் பணச் செலவு அதிகம். இவ்வழக்குகளை மனராசியாகப் பேசியும் அதில் முடிவடியாது இரண்டொரு முறை பஞ்சாயத்தாரை நியமனஞ் செய்து அன்னவர்களைக் கூட்டி வந்தும் ஒன்றும் முடிவடையாது போய் விட்டது. இவ்வழக்குகள் யாவும் ஒத்துப்போக வேண்டுமென்று நன்னேக்கங் கொண்ட நகரத்தாரவர்கள் நாளது தை-மீ ௨௨-கூடியகூட்டத்தில்கானடுகாத்தான் ஸ்ரீமான் சா. ராம. மு. அ. அவர்களை நடுவாக நியமித்து அவர்கள் சொல்லும் நியாயத்தை எல்லோரும் ஏகமனதாய் ஒப்புக் கொள்வதாகப் பேசி முடிவு செய்து கொண்டு அன்னவர்களிடம் தாஙகள் நடுவிருந்து பஞ்சாயம் சொல்ல வேணுமென்று கேட்டதற்கு அவர்கள் சிம்லா போய் வந்ததும் வருவதாக ஒப்புக் கொண்டிருக்கிருர்கள். இனியேனும் நாள் சுணங்காது ஸ்ரீமான் அண்ணமலை செட்டியாரவர்களை சிம்லாவிலிருந்து வந்ததும் கூட்டி வந்து எல்லா விவகாரங்களையும் ஒத்து வைத்து எல்லோரும் க்ஷேமம் அடையும்படி எல்லாம் வல்ல பொன்னழகி தேவி அருள் புரிவாளாக. நாலா பக்கங்களிலும் ரோட்டுப் போடுவதாக நகரத்தார் அவர்களிடம் பொருள் சேகரித்து பணமும் தயாரிலிருக்கிறது. கூடிய சீக்கிரம் ரோட்டு போடுவார்களென்று தெரிகிறது.

உண்மைஉரைப்போன.

---

## புதுவயல் ஸ்ரீ சரஸ்வதி சங்கத்தின்

### ௪௫-வது மாதக்கூட்டம்.

நிகழும் குரோதனஹு தைமீ ௧௩௨ செவ்வாய்க்கிழமை கைலாச விஞயகர் கோவிலில் மாலை ௬ மணிக்கு காரைக்குடி ஆவி. லெ. அருணசலச் செட்டியாரவர்கள் தலைவராக வீற்றிருக்க வீர. பழனியப்ப செட்டியார், டி. என். நடேச ராவ் வேந்தன்பட்டி நா. சோமசுந்தரச் செட்டியார் முதலியவர்கள் முறையே ஒற்றுமை, கல்வி காரைக்காலம்மையார்என்னும்பொருள்பற்றிசொற்பொழிவு நிகழ்த்திஞர்கள். இரவு ௯ மணிக்குச் சபை மங்களகரமாக நிறைவெய்தியதுஎனஉபகாரியதரிசி எழுதுகிருர்.

---

## மகாத்மா மலேரியா சுரத்தால் வருந்துகிருர்.

'கவலைக் கிடமில்லை'

சனிக்கிழமை மகாத்மா காந்தியடிகளுக்கு மலேரியா சுரம் கண்டு, திங்கட்கிழமை ௧௦௪ டிக்ரியாக இருந்தது. மகாத்மா, மருந்து சாப்பிட மறுத்துவிட்டாரெனினும் முடிவில்'கொயினு' (Quinine) எடுத்துக்கொண்டார். கவலைக் கிடமில்லை யென்று வைத்தியர் கருதுகின்றுர்.

---



## பூவிலும் பிஞ்சிலும் உதிர்கின்றன!

புருஷர்களுக்கு ௩௨ வயதும் ஸ்திரீகளுக்கு ௨௬ வயதும் சென்ற பின்னரே விவாகம் செய்ய வேண்டுமென்றும், இவ்விதம் செய்வதே உத்தமமென்றும், ஆடவர்க்கு ௨௬ வயதும் பெண்ணுக்கு ௨௦ வயதும் நிரம்பியவுடன் செய்யும் மன்றல் மத்திமமென்றும், காளையர்க்கு ஆண்டு ௨௦ம் கன்னிகைக்கு ௧௬ம் நடக்குங்கால் செய்யும் விவாகம் அதமமென்றும்,முன்காலத்து அறிஞர்கள் வகுத்த நூல்கள் கூறுகின்றன. ஆனல் நாகரிகத்திலும் கல்வியிலும் சிறந்த தற்கால நம் தனவைசிய மக்களோ தாங்கள் காலம் சென்று போய்விடுமுன் தங்கள் அருமைப் புதல்வர்க்குக் கலியாணம் செய்து கண் குளிரப் பார்க்கவேண்டுமென்று தங்கள் சொந்த இன்பத்தை நாடி, பால்மணமாருத பன்னிரண்டு வயதுள்ள மங்கைக்குப் பத்து வயதுள்ள பாலனை மணளனக வரித்து விடுகின்றுர்கள். இம்முறை எந்த சாஸ்திர நியாயங்களைப் பின்பற்றி நடக்கின்றதோ நாமறியோம். ஆனல் இது அதமத்திலும் அதமமன்ருே! பணத்திற்கு ஆசைப்பட்டும், உறவை விடக்கூடாதென்றும் பிறர் தாக்ஷிண்யத்திற் குட்பட்டும், சிலரது பிடிவாதத்திற் குட்பட்டும், அதிகாரத்திற் கடங்கியுமாகச் சில காரணங்களைக் கொண்டு பால்ய விவாகத்திஞல் விளையும் தீமைகளை உள்ளத்தில் கிஞ்சித்தாவது நினையாமல் தாங்கள் ஆவலுடன் பெற்றுவளர்த்த அருமை மக்களை அறியாப் பருவத்தில் விவாகம் செய்து விடுகின்றுர்கள். சரீரத்தின் நாடி நரம்புகளெல்லாம் புஷ்டி யடைவதற்கு முன்னும், வீர்யம் தேஜஸ் அங்கங்களின் பலம் ரத்தாசய சுவாசாசயங்களுக்குத்திண்மை, கண் காது முதலிய புலன்களுக்குத் தாங்கும் சக்தி, இன்பதுன்பங்களைப்பொறுக்கும்ஆற்றல் ஞாபகசக்தி முதலியவை விருத்தியாகுமுன் பெற்றேர்கள் தங்கள் பிள்ளைகளுக்கு மணம் செய்து தங்களுத்தாங்களே கேடு விளைத்துக்கொள்ளுகிருர்கள். மாப்பிள்ளையும் பெண்ணும் கால விசேஷத்தால் அகால வாழ்விற்குத்தயாராகின்றுர்கள். பெண்பிஞ்சில் பழுத்து ஒன்பது ஆண்டிலே ருதுவாகி விடுகின்றுள். ருதுவான சில தினங்களுக்குள் கருவுற்று பத்தாவது பருவத்தில் ஓர் பாலகனை ஈன்றெடுப்பதை நாம் கண்களால் கண்டிருக்கிறேம். ஆகா! இதென்ன ஆச்சரியம்! இவர்கள் மக்கள் எலிக்குஞ்சுகள் போலவும், தேரைக் குட்டிகள் போலவும், கைகால் முடங்கியவையாய்ப்பிறப்பதற்கு ஆக்ஷேபனை யென்ன? அக் கர்ப்பத்தின் பலன் பூவிலும் பிஞ்சிலும் உதிர்ந்து போகின்றது. அம்மட்டோ? பேறுகாலத்தின் அவஸ்தையும் பிள்ளைப்பேற்றின் கஷ்டமும் இன்னவிதமென்று இங்கு எழுதமுடியாது. தப்பிப் பிறக்கும் குழந்தைகள் பிழைத்தாலும் இம் மங்கை தன் முகம் வாடி கண்கள் குழிவிழுந்து அழகு குன்றி சரீரக் கட்டுகளெல்லாம் தளர்ந்து ஐம்பது ஆண்டு சென்ற கிழவி போல் பலவீனத்துடன் நடந்து இவ்வுலகத்தி லிருக்குங் காலமெல்லாம் பலவித நோய் வாய்ப்பட்டு வருந்துகின்றுள். ஆஹா! பெற்றேர்களே! பிதாக்களும் மாதாக்களுமாக இருப்பவர்களே! பால்ய மணத்தின் கெடுதிகளை எப்பொழுது அறிந்து அதை அகற்றுவீர்கள்? இனிமேலாவது தங்க ளருமைக் குழந்தைகளுக்கு இக் கொடுஞ் செய்கையை விளைவிக்காம. விருப்பீர்களாக என்று கியோசான் கரு. குமரப்பன் எழுதுகிருர்.

---

## புலாலுண்ணவேண்டாம்.

அடைதற்கரிய மானிட ஜென்மமெடுத்தும் குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொள்வதுபோல் அநேகர் தெரிந்தோ தெரியாமலோ கேவலமுள்ள இவ்வுடலை வளர்க்கப் பல உயிர்களைக் கொன்று அதன் ஆபாசமான மாமிசத்தைப் புசிக்கிருர்கள். ஒவ்வொரு சரீரத்தினுள்ளும் சர்வசக்தி யுடைய ஈச்வரன் அந்தர்யாமியாய், ஆனந்தமாய் வசிக்கிருன். ஒவ்வொரு சரீரமும் அவன் நடமாடும் கோவிலன்ருே? தவிர, புலாலுண்பவன் நித்தியானந்தமான மோக்ஷ பதவியை இழந்து அதோகதியான துன்பத்திலாழ்ந்து அவதிக்குள்ளாவானென, சாஸ்திரங்கள் முறையிடுகின்றன. குட்டிச்சுவரில் முட்டக்கண் வெள்ளெழுத்தா? ஒவ்வொரு ஜீவனும் கெட்ட காரியங்களைச் செய்தே கேவலமான மிருகங்களாகவும் பக்ஷிகளாகவும் ஜென்மமெடுத்து அவதிப் படுகின்றன. ஆனதால் சகோதரர்களே! புலாலுணவை நீக்கி மாக்கறி உணவை உட்கொண்டு சர்வசக்தியுள்ள ஈச்வரனுடைய அனுக்கிரகத்தைப் பெறுமாறு கோருகிறேன் என்று மு. வள்ளியப்பன் எழுதுகிருர்.

---

## ஈய வியாபாரத்தின் அபிவிருத்தி.

ஈயத் தொழில் நன்னிலை யுற்று வருகிறதென்றும் மகா யுத்தத்திற்குமுன் இருந்த முன்னேற்ற நிலையினை அடைந்து வருகிற தென்றும், ஸ்ட்ரெயிட்ஸ் ட்ரேடிங் கம்பெனிக் கூட்டத்தின் அக்கிராசனர் கூறிஞர். எப். எம். எஸ். ஈயத் தொழில் நல்ல லாபகரமானதாக அபிவிருத்தி யடைந்து வருகிறது.

## பனையப்பட்டியில் சாதுக்கள் மடம்.

விருப்பு வெறுப்பற்ற அடியவர்களுக்குப் பசிப்பிணி கண்டு அன்னமிடல் பெரும் புண்ணியமே. இதை யுணர்வோர் இக்காலத்தில் மிக அரியர். அடியார்கள் உண்டு இன்புற்றிருப்பதைத் தான் கண்டின்புறவான் வேண்டி பனையப்பட்டியில் சாதுக்களுக்கு மடாலயம் பெரும்பொருள் செலவிட்டு ஸ்ரீமாந் மு. ராம. மு. இராமநாதஞ் செட்டியார் அவர்கள் கட்டிஞர்கள். அதன் திறப்புவிழா நாளது தைமீ ௬௨ நடைபெற்றது. அன்று மாலை ௫-மணிக்கு நியாய சந்திர வேதாந்த பாஸ்கர வீர. சுப்பய்யா ஞானதேசிகர் அவர்களது தலைமையில் பல அடியார்கள் அடியவர்கள் பெருமையைப்பற்றி உபந்யசித்தார்கள். இரவு ௯-மணிக்கு உபந்யாசங்கள் முடிவுற்றன. பின்னர் ௧௦-மணிக்கு கூழிபிறைச் சிவனடியார் திருக்கூட்டத்தினர்கள் சிறிது நேரம் பஜனை செய்தனர். அதன் பின்னர் திருவாளர் வீ. பெரி. பழ. சொக்கலிங்கம்செட்டியார் அவர்கள் தலைமையில் தெ. நா. ராம. சோமசுந்தரம் திருக்கூட்டத்தினர்களது நோக்கமும் வேலையையும் பற்றி உபந்யசித்தார். பின்னர் ஸ்ரீ சுப்பிரமணியரை மயில்வாகனத்தில் அலங்கரித்து, சகல ஆடம்பர வைபவங்களோடு எழுந்தருளச்செய்ய கூழிபிறைச் சிவனடியார் திருக்கூட்டத்தாரின் அங்கத்தினர்களால் பஜனை பல இன்னிசைக் கருவிகளுடன் நடைபெற சுவாமி இரவு ௧-மணிக்கு தம திருக்கை வந்து சேர்ந்தனர். மடாலயத் திறப்புவிழா மங்களகரமாக நிறைவெய்தியது என ஒரு நிருபர் அறிவிக்கிருர்.

---

## அகில இந்திய நூல் நூற்பவர் சங்கம்.

இச்சங்கத்தின் ஆபீசு, ஆமதாபாத் எல்லிஸ் ப்ரிட்ஜ், ஆகாகான் பங்களா (Aga Khan's Bangalow, Ellis Bridge, Ahmedabad)வுக்கு மாற்றப்பட்டிருக்கிறது. இனி, சங்க அமைச்சர்க்கு அனுப்பப்பெறும் கடிதங்களெல்லாம், புது விலாசத்திற்கே அனுப்பப்பட வேண்டும். ஆனல் 'டெக்னிகல் இலாகா'விற்கு அனுப்பப்படும் கடிதங்களும் நூல் சந்தாவும் நூல் சந்தாவைக் குறித்த கடிதங்களும் வழக்கம் போல் சபர்மதி சத்தியாக்கிரக ஆச்சிரமம் அகில இந்திய நூற்பவர் சங்கம் டெக்னிகல் இலாகா, டிரக்டர் என்ற விலாசத்திற்கே எழுதப்பெறவேண்டும்.

---

## தென் இந்திய விஞ்ஞான சாஸ்திரியார்.

இயற்கை நூல் ஆராய்ச்சியில் பௌதிக சாஸ்திர (Physics) நிபுணராக விளங்கும் திரு. வெங்கடாமணய்யாவுக்கு பாரிஸ் சர்வகலாசாலை 'டாக்டர்' பட்டமளித்தது, பொதுவாக இந்தியாவிற்கும் சிறப்பாக நந்தென்னிந்திய நாட்டிற்கும் பெருமை தரும் ஓரிய நிகழ்ச்சியாகும். அவ்வமயம் பிரஞ்சு

விஞ்ஞான சாஸ்திரிகள் (Scientists) குழுமியிருந்தனர். அவர்களுள் நிபுணரான ஒருவர் பின்வருமாறு பேசினர்:— "தங்களை ஒரு சகோதரராக மதிப்பது எங்களுக்குப் பெருமை தருகிறது. இப் பல்கலைக் கழகம் தங்களுக்கு 'டாக்டர்' பட்டம் கொடுக்கும் பேறுபெற்றதற்காகப் பெருமை யடைகின்றது. இந்திய மாணவர் அறிவு எங்களுக்கு ஆச்சரியத்தை விளைக்கின்றது" இவ்வாறு பிரஞ்சு அறிஞர் உர்பேன் வழங்கிய அறிவுரைகள், சிறப்பித்தம் தலைக்கேறி நம்மைப் புறக்கணிக்கும் வெள்ளை மக்களுக்கு நல்லறிவு கொளுத்துமென்று நம்புகிறோம்.

---

விவாத அம்சங்கள் இன்னவை யென்று நிஷ்கரிஷை பண்ணுவதற்காக சம்மன்.

(ஆர்டர் 5 விவரம் 1—5.)

## ஈந்தட்டா சப் டிவிஷனல் கோர்ட்டு.

(அசல் சிவில் விவகார விசாரணை.)

1925-ஷ்த்திய ரெகுலர் நெ. 79ல்.

M. M. K. P. கடை மானேஜிங் பார்ட்னர் இராமன் ... } வாதி.

K. S. V. சுப்பையா பிள்ளை வகையரு } பிரதிவாதிகள்.

இராமநாதபுரம் ஜில்லா சிவகங்கை சென்னல்குடி சாகம் சிறுகூடல்பட்டி கிராமத்திலிருக்கும் காலஞ்சென்ற தன் தகப்பனர் வேலுப் பிள்ளையின் சரியான பிரதிநிதி வியாபாரி K. S. V. வீரப்பபிள்ளைக்கு.

உமக்கு விரோதமாய் வாதி ரூபாய் 2048—5—9 திரும்பப் பற்றிக்கொள்வதற்காக வியாஜ்ஜியம் தொடர்ந்திருக்கிறபடியால், ஷெ தாவாவுக்கு மறுமொழி சொல்லும் பொருட்டு 1926 ஷ பிப்ரவரி மீ 20வயில் பகல் 10 மணிக்கு நீர் இந்தக் கோர்ட்டிலே நேரில் ஆஜராகும்படி அல்லது ஒரு ப்ளீடருக்குச் சங்கதிகளைக் கிரமமாய்த் தெரிவித்து ஷெ வியாஜ்ஜியத்தைப் பற்றிய முக்கியமான சகல கேள்விகளுக்கும் மறுமொழி சொல்லக் கூடிய யாதொரு நபரை அவரோடு சேர்த்தோ அந்த ப்ளீடரை ஆஜர்ப் படுத்தும்படி உமக்கு இந்த ஸம்மன்ஸ் பிறப்பிக்கப்படுகிறது. நீர் உம்முடைய பிரதிவாதத்துக்கு ஆதாரமாக எவைகளை நம்ப உத்தேசிக்கிறீரோ அப்படிப்பட்ட சகல தஸ்தவேஜுகளையும் அந்தத் தினத்திலே ஆஜர் படுத்த வேண்டுமென்று உமக்குக்கட்டளையிடப்படுகிறது.

முன்னே சொல்லியுள்ள தினத்தில் நீர் ஆஜராகத்தவறி விட்டால் நீர் இல்லாமலிருக்கையிலேயே ஷெ வியாஜ்ஜியம் விசாரித்துத்தீர்மானிக்கப்படுமென்று இதன்மூலமாய் தெரிந்து கொள்ளக்கடவீர்.

1926-ஷ ஜனவரி மீ 14வ என் கையெழுத்தும் கோர்ட்டு முத்திரையும் போட்டுக் கொடுக்கப்பட்டது.

சார்வுப் படிக் கட்டணத்தினின்றும் விலக்கப்பட்டது. ரூபா 1 பெற்றுக் கொள்ளப்பட்டது.

ஷேவ் டேன் ஆவுங்,
சப் டிவிஷனல் ஜட்ஜ்.

அறிக்கை.—1. உம்முடைய சாட்சிகள் தாங்களாகவே ஆஜராக மாட்டார்களென்று உமக்குச் சந்தேகம் தோற்றினால், விசாரணைக்கு முன்னே எப்போதாவது இந்தக் கோர்ட்டாரிடத்தில் விண்ணப்பம் பண்ணிக் கொண்டு அவசியமான செலவுத் தொகைகளைக் கட்டுவதன் மேல் யாதொரு சாட்சியை ஆஜராகும்படியும், எதை ஆஜர்ப்படுத்த வேண்டுமென்று அந்தச்சாக்ஷியைக்கேட்க உமக்குச் சுதந்தரமுண்டோ அப்படிப்பட்ட யாதொரு தஸ்தவேஜை ஆஜர்ப் படுத்தும்படியும் கட்டாயப்படுத்த நீர் இந்தக் கோர்ட்டிலிருந்து சம்மன் பிறப்பித்துக் கொள்ளலாம்.

2. தாவாவை நீர் ஒத்துக்கொண்டால், நீர் பணத்தை வியாஜ்ஜியச் செலவோடு கூடக் கோர்ட்டிலே செலுத்த வேண்டும்; செலுத்தாவிட்டால், டிக்ரியை நிறைவேற்றும்படி நேரிடும். இந்த டிக்ரியானது உம்முடைய சரீரத்தின் மேலாகிலும், சொத்தின் மேலாகிலும், இரண்டின் மேலுமாகிலும் பிறப்பிக்கப்படலாம்.

---

### பள்ளத்தூர்.

நாளிது ஷ தைத்திங்கள் ௧0-ம் நாள் மாலை ௪-மணிக்கு இவ்வூர் அருணசலஞ்செட்டியார் ஹைஸ்கூலில் வாலிபச் சாரணர்களது (Scout) வாக்குறுதி வைபவம் நடைபெற்றது. அவ்வமயம் காரைக்குடி மீனாக்ஷிசுந்தரேசுவர வித்தியாசாலைத் தலைமை ஆசிரியர் என். எஸ். வெங்கடாமய்யர் அவர்கள் எம். ஏ., எல். டி., அக்கிராசனம் வகித்தார்கள். அப்பொழுது முதலாவதாகக் கடவுள் வாழ்த்துக் கூறப்பட்டு, தலைவரவர்கள் முன்னுரை கூறினார்கள். பின்பு சாரணர்களது வாக்குறுதி வைபவம் நடைபெற்றது. ஒவ்வொருவருடைய வாக்குறுதி பின் வருமாறு—எப்பொழுதும்தேசத்தினிடத்தும் கடவுளினிடத்தும், அரசனிடத்தும். ஜனங்களிடத்தும் அன்புள்ளவனாக நடந்து கொள்வது; தமது ஆசிரியருக்கும், தமது இயக்கத்தின் சட்டங்களுக்கும் கீழ்ப்படிந்து நடப்பது; எப்பொழுதும் ஹிம்சை செய்வதில்லை. ஒவ்வொருவரும் சத்தியம் செய்த பின்னர் ஆசிரியர் வாக்குறுதி செய்த காலம் முதல் தம்முடைய இயக்கத்தில் ஒருவனாக, ஒவ்வொருவரையும் சேர்த்துக்கொண்டார். பின்னர் சாரணர்களது நோக்கம், வேலை, வந்தனம், உடுப்பு, வகுப்பு முதலியவைகளைப் பற்றி பள்ளத்தூர் கலாசாலைத் தமிழ் பண்டிதரவர்களும், வாலிபச் சாரணரது ஆசிரியரான தி. எஸ். பி. ஹரய்யாவர்களும், காரைக்குடி ஹைஸ்கூல் ஆசிரியர் ஏ. இராமாநுஜ ஐயங்கார் பி. ஏ., எல். டி., அவர்களும் நன்ருக உபந்யசித்தனர். பிறகு தலைவர்தாய்மொழியில் வெகு நன்ருக வாலிபச் சாரணர்களுக்குப் புத்திமதி கூறி முடிவுரை கூறினார்கள். பின்பு பள்ளத்தூர் தலைமை ஆசிரியர் எம். ஜி. குருசாமிஐயரவர்கள் எம். ஏ., எல். டி. அனைவருக்கும் வந்தனங் கூறினார்கள். பின் சாரணஆசிரியருடன் சாரணர் ராஜவாழ்த்தும் நந் தம் பாரத தேவியின் வாழ்த்தும் கூற பிற்பகல் ௭-மணிக்கு இவ்விழா இனிது நிறைவெய்தியது.





## அமெரிக்காவும் ரப்பரும்.

('தமிழ்நேசன்' பத்திரிகையிலிருந்து)

ரப்பர் விலையைப்பற்றி ஆராய ஒரு கமிட்டி அமெரிக்காவில் நியமித்திருந்தார்கள். அவர்களுடைய கூட்ட நடவடிக்கைகளைக் கவனித்த அமெரிக்கப் பத்திரிகைகள் எல்லாம் தலை அங்கங்கள் எழுதி வேடிக்கை பண்ணுகின்றனவென்று ராய்ட்டர் தந்தி ஒன்று கூறுகிறது. வியாபார மந்திரி மிஸ்டர் ஹூவர் தான் பதிலுக்குப்பதில் செய்ய வேண்டுமென்ற பிரஸ்தாபத்தை ஆரம்பித்தவர் என்றும் அவரே இப்பொழுது அந்த வேலை செய்யக்கூடாதென்று கூறுகிருர் என்றும் "நியூயார்க் ஓர்ல்ட்" கூறுகிறது. தங்களிடத்திலேயே உயர்ந்த வரிவிதிக்கும் ஏற்பாடிருக்கும்பொழுது மற்ற நாடுகளைப்பற்றி நாம் குறை கூறுவது என்ன நியாயமோ என்று "நியூயார்க் டைம்ஸ்" கேட்கிறது.

வியாபார மந்திரி செனடர் ஆதர் கபருக்கு எழுதிய கடிதமொன்றில் பிரிட்டிஷ் கீழ இந்தியத் தீவில் உள்ள தோட்டக்காரர்கள் ரப்பருடைய விலையைக் கட்டுப்பாடாக உயர்த்தி அமெரிக்காக்காரர்களை அநியாயமாய்ச் சாப்பிட்டுவிட்டார்கள் என்று குறைகூறிக் கொண்டார். ௧௯௨௨-ம் ஆண்டு திட்டமிட்ட ஸ்டீவென்ஸன் ஏற்பாடு ஒரு ராத்தலுக்கு நியாயமான விலையாகிய ௧ ஷில்லிங் ௩ பென்சு முதல் ௧ ஷில்லிங் ௯ பென்சுவரையில் எதிர் பார்த்தது என்று எடுத்துக்காட்டினர், அவ்விலை விற்ருலும் ௱00க்கு ௧௫ முதல் ௨௫ வரையில் லாபம் கிடைக்குமென்று விளைவிப்போரின் கமிட்டி சொன்னதாகச் சொன்னா. ஆனல் விலையோ ௭௭ சென்ட் (அமெரிக்கா) ஒரு சமயம் டாலர் ௧-௧௨க்கும் ஏறிற்று.

இது முழுவதும் கட்டுப்பாடாகச் செய்ததே என்றும் இதனை ௧௯௨௬-ல் அழியக்கூடிய ரப்பர் சுமார் ௫௮0,000 டன்னிலிருந்து தெரிந்துகொள்ளலாமென்றும், உற்பத்தியோ ௯௨௫,000 டன்கள் எதிர்பார்க்கப்படுகிறதென்றும் கூறினர். ஆதலால் நமக்கு வந்திருப்பது உள்ளபடி ரப்பர் பஞ்சமில்லை; ஆனல் வேண்டுமென்று கட்டுப்பாடாக ஏற்றப்பட்ட விலைதான் என்ருர். ௧௯௨௬-ம் வருஷத்திற்கு அமெரிக்கா அழிக்கக்கூடிய ரப்பர் ௯௦ கோடி ராத்தல் என்று திட்டமிடப்பட்டிருக்கிறது. நியாயமான விலையில் அது ௩௨ கோடி ௫௦ லக்ஷம் அமெரிக்க டாலர் ஆகும். ஆனல் தற்போது விற்கும் டாலர் ௧-௫0 விலைப் பிரகாரம் ௧௧ கோடி டாலர் அதாவது ௯௯ கோடி ௯0 லக்ஷம் டாலர் கூடுதலாக ஆகிறது. மோட்டார்கார் உபயோகிக்கும் ஒவ்வொருவருக்கும் ஒரு 'செட்' டயர்களுக்கு டாலர் ௨0 முதல் ௭0 வரையில் அதிகமாக ஆகும். இது டயர் செய்யும் எண்ணிறந்த சிறிய வியாபாரிகளை வேலையை நிறுத்தும்படி செய்துவிட்டது.

### பூச்சாண்டி.

மிஸ்டர் ஹூவர் வியாபாரத்தில் பதிலுக்குப்பதில் செய்துவிடப்பிரியப்படவில்லை. ஆனல் தற்காப்பாகக் கீழ்க்கண்டவைகளை அனுஷ்டிக்கச் சொல்லுகிருர்.

(க) இந்தக் கட்டுப்பாடுகளுக்குச் சாதகமாக அமெரிக்காக்காரர்கள் கடன் கொடுத்து ஆதரிப்பதை அதைரியப் படுத்தவேண்டியது.

(உ) இந்தமாதிரிக் கட்டுப்பாடுகளால் எந்தச் சாக்கின் விலை தாங்கமுடியாமல் ஏறுகிறதோ அதைக் கூடியமட்டில் உபயோகியாது குறைத்தல்.

(ங) இதற்குப் பதிலாகச் செய்யக்கூடிய செயற்கை வஸ்துக்களை உபயோகிக்க ஊக்க மூட்டல்.

(ச) இந்தமாதிரி கட்டுப்பாடுகள் செய்யப்படாத நாடுகளில் நாம் இந்தச் சாக்குகளை விருத்திசெய்ய முயற்சிப்பது.

(ரு) தங்களுடைய நூற்றுக்கணக்கான வியாபாரிகள் ஒருவரோடொருவர் போட்டி போட்டுக்கொள்ளாமல் இருக்கும்படி ஒரு ஏற்பாடுசெய்தல்.

ஷெ மிஸ்டர் ஹூவருடைய கடிதமானது லேவாதேவி வட்டையில் பொருளாதாரக் காரணங்களைக் காட்டிலும் ராஜீய காரணங்களால் தூண்டப்பட்டிருக்கிறதென்று கருதப்படுகிறது.

### அமெரிக்காவுக்கு சப்ளை.

ரப்பர் சப்ளைக்கு பிரிட்டிஷ் ராஜ்யங்களை நம்பியிராமல் அமெரிக்க விவசாய இலாகா மந்திரி மிஸ்டர் ஜார்டின், ஜனுதிபதி கூலிட்ஜுக்கு அனுப்பும் தமது வருடாந்தர அறிக்கையில் உஷ்ணப் பிரதேசங்களில் விளையக்கூடிய பொருள்களெல்லாம் உற்பத்தியாகும் புளோரிடா என்னும் தீவை உபயோகிக்கச் சொல்லுகிருர். கூலிகளுடைய கிருக்கி அதிகமா யிருக்கிறபடியால் அங்கே கீழ் இந்தியத்தோட்ட ஏற்பாடு சரிப்படாதென்ருலும் தக்க விவசாய முறையில் வேறுவிதமான ரப்பர் தோட்ட ஏற்பாடுகள் செய்ய முடியாததல்ல. பின்னும் அவர் கூறுவதாவது:—

அநேக தொழில் நிபுணர்களாலும், பொருளாதார அறிவாளர்களாலும் மிகக் கடுமையான ரப்பர் பஞ்சம் ஒன்று ஏற்படுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. சென்ற சில ஆண்டுகளில் தொழில் துறைகளுக்கு மட்டுமல்ல, ராணுவத் தேவைகளுக்கும் இன்றியமையாததாக ஆகிவிட்ட ஒரு பொருளுக்கு நாம் கீழ் இந்தியப் பகுதிகளை நம்பி யிருப்பது அபாயகரமானது. உலகத்தில் மற்ற பாகங்கள் எல்லாவற்றிலும் உபயோகிக்கப்படும் ரப்பரைப்போல் மூன்று பங்கு ரப்பர் ஐக்கிய நாடுகளில் உபயோகப் படுத்தப் படுகிறது. நமது தற்கால நாகரிகத்தில் ரப்பர் இல்லாமல் காலந் தள்ளமுடியாது. அந்த ஜாதிப் பயிர் தன்னந்தனியே வெட்டவெளியில் முளைப்பதிலும் இயற்கை உற்பத்தியில் மட்டும் பொறுத்திராமலும் இருக்கும். சாதகம் கிடைக்குமட்டில் ரப்பர் உற்பத்தி செய்ய ஏற்படும் விவசாய முயற்சிகள் இந்த ஒரு ரப்பர் மரத்தோடு மட்டில் நிற்கா. கலிபோர்னியாவில் சில பரீக்ஷைகள் செய்யப்பட்டு வருகின்றன. 'ஆஸ்கிலிபியாஸ் சுபுலாடா' என்னும் ஒரு பால் கொடி, பொட்டல் நிலத்தில் வளர்ந்து ஏராளமாகவும் அதிகச் செலவில்லாமலும் ரப்பர் எடுக்கக் கூடிய ஒரு சாக்கைக் கொடுப்பதால் அதை வைத்துப் பல பரீக்ஷைகள் செய்யப்பட்டு வருகின்றன. கால்வாய்ப் பிரதேசத்தில் எல்லாவிதமான ரப்பர் பயிர்களும் சோதிக்கப்பட்டு வருகின்றன.

### ஜனதிபதி கூலிட்ஜின் அபிப்பிராயம்.

பிலிப்பைன் தீவுகளிலும் பிற விடங்களிலும் அமெரிக்கர்களுக்குச் சொந்தமான ரப்பர் போட அரசாங்கத்திலிருந்து கடன் கொடுக்கவேண்டுமென்று யோசனை கூறப்பட்டது. இதற்கு அவசியம் இருப்பதாகத் தமது அபிப்பிராயத்தில் தெரியவில்லை என்று ஜனதிபதி கூலிட்ஜ் சொன்னர். அன்றியும் இதில் சம்பந்தப்பட்ட தொழிலாளர்கள் இந்த வேலைகளைச் செய்யப் போதிய தனமுடையவர்களா யிருக்கிருர்கள் என்பது அவருக்குத் தெரியுமாம்.

---

### அதிக விலையால் அமெரிக்கர் ரப்பர் வாங்குவதைக் குறைத்தல்.

(ராய்ட்டர் ஸ்பெஷல் தந்தி)

சென்ற நவம்பர் மாதத்தில் வாங்கப்பெற்ற ரப்பரைப் பார்க்கிலும் டிசம்பர் மாதத்தில் ௬000 டன் யூனைடெட்ஸ் டேட்ஸ் குறைத்து வாங்கினதாக, மிஸ்டர் ஹூவர் அறிவித்துள்ளார். அதிக விலையை முன்னிட்டு அமெரிக்க மக்கள் ரப்பர் உபயோகத்தைக் குறைக்க விரும்புகின்றன ரென்று இதிலிருந்து தெரியவருகிறதாம். அடுத்த ஆறு மாசத்திற்குத் தேவையான ரப்பரில் ௧00க்கு ௭௫ பங்குக்கு ஏறகெனவே அட்வான்ஸ் ஒப்பந்தங்களுண்டென்று மிஸ்டர் ஹூவர் குறிப்பிடுகின்ருர்.

செயற்கை ரப்பர் செய்வதற்குச் செலவு அதிகமாவதால், அதனையும் அதிகமாக உபயோகிக்கக்கூடவில்லையென்று மிஸ்டர் வால்டர்ஸ், அமெரிக்க பிரதிநிதி சபையார் அமைத்துள்ள வர்த்தகக் கழகத்தின் முன் சாட்சியம் கொடுத்திருக்கிருர்.

### விசாரணை முடிவு.

(வாஷிங்டன் ஸ்பெஷல் தந்தி.)

அமெரிக்கப்பிரதிநிதிசபையின் கழகத்தார் பிரிட்டிஷாரது ஏகபோக ரப்பர் உரிமையைக் குறித்துத் தங்கள் விசாரணையை முடித்து விட்டார்கள். கடைசியாக விசாரிக்கப் பெற்ற சாட்சி, போர் இலாகா காரியதரிசி மிஸ்டர் டேவிஸ் என்பார். அவர் அமெரிக்காவின் தற்காப்பு நிலையிலிருந்து இந்தப் பிரசினையைக் குறித்து விவகரித்தார். அமெரிக்கா ரப்பர் சங்கத்தைச் சேர்ந்த மிஸ்டர் விட்போர்டு, பிரிட்டிஷ் கட்டுப்பாடுகளைக் குறித்து எப்படிப்பட்ட முடிவு ஏற்பட்ட போதிலும், உலகத்தாரின் தேவைக்குப் போதுமான ரப்பர் வேண்டுமென்ருல், அதிகமாக ரப்பர் பயிர் செய்யப்பட வேண்டு மென்பதை ஏற்கெனவே வற்புறுத்தியுள்ளார்.

குமரன்—வாரப்பதிப்பு.

வருஷ சந்தா உள்நாட்டுக்கு ரூ ௪-0-0
,, வெளிநாடுகட்கு ரூ ௫-0-0
மாதிரிப் பிரதி இனும்.

குமரன்—மாதப்பதிப்பு.

வருஷ சந்தா உள்நாட்டுக்கு ரூ ௩-0-0
,, வெளிநாடுகட்கு ரூ ௩-௮-0
தனிப்பிரதி ரூ 0-௪-0








சொ. முருகப்பசெட்டியாரால் (பத்திராதிபர்) காரைக்குடி 'குமரன்' அச்சுக்கூடத்தில் அச்சியற்றிப் பிரசுரிக்கப் பெற்றது.

தனவைசிய சமூக அநுபந்தம் ௪.



உ
சிவமயம்.
மரகத விநாயகர் துணை.




"என்கடன் பணிசெய்து கிடப்பதே."

நாட்டுக்கோட்டையாருக்கு மாத்திரம் அனுப்பப்பெறும்.

"ஆலயந் தொழுவது சாலவு நன்று." "திரைகட லோடியுந் திரவியந் தேடு."

காரைக்குடி, குரோதன-ஹு தை மீ ௧௪உ (27—1—26.)



மாவாழு மேழு வழிநகரத் தார்க்கென்றுங்
கோவாழுஞ் செல்வக் குலதெய்வ—மாவாழ்
மரகதவி நாயகனை மாமலர்தாய் வாழ்த்த
வரநலவாழ் வெல்லாம் வரும்.

—நகரத்தார் சரித்திரம்.

## தீர்மானங்களின் கருத்தென்ன?

தொண்ணூற்றுநூர்க் கூட்டத்தில் செய்யப்பெற்ற தீர்மானங்கள் யாருக்காகச் செய்யப் பெற்றன? ஏன் செய்யப்பெற்றன? எவர் செய்தனர்? அத்தீர்மானங்கள் நிலைபெற்றிருந்தால் கிடைக்கும் நன்மை யாருக்கு? என்ற விஷயங்களை ஒவ்வொருவரும் எண்ணிப் பார்த்தல் அவசியமாகும். சமூகமானது அல்லற் காற்றில் அகப்பட்டுத் திசை தெரியாது தவிக்கின்றது. எதனைச் செய்வது எதனை விலக்குவது எப்படிச் செலவுகளின் வாயிலிருந்து தப்பிப் பிழைப்பது என்று கவலுறும் மக்கள் தொகை அதிகரித்து வருகின்றது. எளியவன் எளிமையாக வாழ முடியவில்லை. பணக்காரரும் செலவுக்கு வகை பண்ண முடியவில்லை. பணத்தைச் செலவிட்டாலும் பயன்பெற முடியவில்லை. இந்நிலையை மாற்றிச் சிறிது சுகமாக வாழ வழியுண்டாவென்று தவித்துக்கொண்டிருந்த ஜன சமூகத்திற்கு நடுக்கடலிற் கிடைத்த தெப்பம் போல தொண்ணூற்றுநூர்க்கூட்டம் வாய்த்திருக்கிறது. அதில் செய்யப் பெற்றிருக்கிற தீர்மானங்கள் யாவும் நமது சமூகத்தாரது நன்மைக்காகவே செய்யப் பெற்றிருக்கின்றன. தற்போதிருக்கிற வழக்கங்களை ஒட்டியும் வெட்டியும் தீர்மானங்கள் செய்யப் பெற்றிருப்பினும் அநுஷ்டிக்க முடியாத வகையில் எந்தத் தீர்மானமும் இருக்கவில்லை. நீண்ட நாளாகக் கட்டுப்பாடின்றி மனம் போன வாறு செலவுசெய்து பழகிப் போய் விட்டபடியால் தீர்மானங்கள் சிறிது சிரமமாகத் தோற்றலாம். தீர்மானத்தை மீறி அழித்து விட்டால் பின்னர் இப்போதிருப்பதை விட எத்தனை மடங்கு துன்பம் அனுபவிக்க வேண்டியிருக்குமென்பதை யுணர்தல் அவசியமாகும். இப்போது எங்கும் தீர்மானங்கள் நேராக நடைபெற்று வருகிற தெனினும் மக்கள் மனது இன்னும் அடங்கி வழிப்பட வேண்டுமென்று கூறுவது மிகையாகாது. தீர்மானத்திற்கடங்கும் போதும் அதன் எல்லையில்தான் நிற்கவிரும்புகின்றனர். தவிர தீர்மானத்தில் எழுதவிட்டுப் போன இடங்களை ஆதாரமாகக் கொண்டு செலவு செய்ய விரும்புவோரும் சிலர் காணப் படாமலில்லை, உதாரணமாக ஒன்று கூற விரும்புகிறோம். பெட்டிகள் கொடுப்பது மிகச் சாதாரணமான காரியமாதுமென் றெண்ணியே அதனை வேண்டாமென்று தீர்மானத்திற் குறிப்பிடவில்லை. எனவே எடுத்ததற்கெல்லாம் பெட்டி கொடுப்பதென்று ஆரம்பித்தால் எப்படி இருக்கும். ஒரு புறத்தை அழுத்தினால் மறுபுறம் எழுகின்ற கதையாக நமது வாழ்வானது சென்றுகொண்டிருக்குமாயின் இதற்கு விமோசன காலந்தான் எப்பொழுதுவருவது? ஆங்காங்குள்ள அன்பர்கள் இவைகளைக் கவனித்துக் கூடிய வரை அடக்கமாகச் செய்ய முயலுதல் அவசியமாகும். எல்லாவற்றுக்கும் தீர்மானங்கள் எழுதிக் கொண்டிருப்பதும் முடியாத காரியமேயன்றோ? புதிய முறைகளை யுண்டாக்குதற்கு ஒரு கூட்டமுங் கூடவில்லையே! ஒவ்வொருவராகச் செய்து பெரிதாக்கி மாற்ற முடியாத வழக்கமாக்கி விடுகின்றனர். பின்னர் கூட்டங்கூடி நிறுத்த பகீரத முயற்சி செய்யவேண்டியிருக்கிறது. வழக்கங்களையும் வீண்செலவையும் பயிரிட்டுத் தண்ணீரும் விட்டு வளர்க்க முயன்றால் கூட்டம் என்ன செய்யும்? ஜன சமூகத்தின் நன்மையை உத்தேசித்துச் செய்யப் பெறும் தீர்மானங்கள் நிலை பெற்றிருந்தால் எல்லாருக்கும் நன்மையுண்டு. கூட்டத் தீர்மானங்களின்பயனாகச் சென்ற மூன்று மாத காலத்திற்குள் சுமார் இரண்டு லட்சத்துக்கு மேல் நம்மவருடைய பணம் வீண் செலவிலிருந்துமீட்கப் பெற்றிருக்குமென்று மதிப்பிடப் பெறுகின்றது. கல்யாண மாதங்களெல்லாம் இனிமேல் வருகின்றன, இன்னும் ஏராளமான பொருளை மிச்சப் ப

த்தி சமூகமானது இன்ப வாழ்வு வாழ்ந்தோங்குமாறு செய்ய ஒவ்வொருவரும் முயலுதல் வேண்டும். அதற்கு அஸ்திவாரமாக நிற்பது தொண்ணூற்றுநூர்க் கூட்டத் தீர்மானங்களேயா மென்பதை ஒவ்வொருவரும் மனத்திற் பதிப்பாராக. நமது சமூகமானது சீரும் சிறப்பும் பெற்றுப் பிறரால் மதிப்புற வேண்டுமானால் தொண்ணூற்றுநூர்க் கூட்டமும் அதன் தீர்மானங்களும் பொன்னுக எண்ணிப் போற்றப் பெறல் வேண்டும்.

## குறிப்புக்கள்.

### கல்யாணம் நடைபெறுகிறது.

பதின்மூவாயிரம் ரூபா பெண்ணுக்குக் கொடுக்கலாம் என்ற தீர்மானம் அமுலுக்குவருமா? என்று பலர் ஐயங்கொண்டனர். மெதுவாக நடக்க ஆரம்பிக்கிறது என்று கேட்டு மகிழ்வடைகிறோம். பெண்ணுக்கென ஒரு காசுகொடுத்தலும் வாங்குதலும் கூடாதென்று கூரை மீது நின்று அறைகூவுதல் தருமமாயினும் கூட்டத் தீர்மானம் அமுலுக்கு வருதல் கண்டு உவகையுறுகின்றோம். பெண்ணைப் பெற்றவர் அதனை நாயகனிடத்துத் தாரை வார்த்து விடுவதே உண்மைத் தருமமாகும். அப்படியிருக்க பதின்மூவாயிரம் பெற்றுக்கொண்டும் கல்யாணம் செய்ய மறுப்பார்களானால் அவர்கள் மீளா நரகுக்கே ஆளாவரென்பது திண்ணம். இம்மையில் அவர்கள் பணத்தைப்பெற்று ஒருவாறு வாழ எண்ணினாலும் மறுமைத் துன்பம் உண்டென்பதை உணர வேண்டும். பெண்ணுக்காகப் பலமுறை வாங்கியவர்கூடப் பழைய நிலையில்தான் நிற்பாரன்றிப் பணக்காரராவதில்லை. பதின்மூவாயிரம் ரூபா பெற்றுவது பெண்களைக் கட்ட முன் வருகின்றனர். இதுவரை சுமார் பத்துக் கல்யாணங்கள் வரை நடைபெற்றிருப்பதாகச் செய்தி யெட்டுகின்றது.

### மோசம் செய்வார்களா ?

வெளியில் பதின்மூவாயிரமென்று சொல்லிவிட்டு உள்ளே மோசம் செய்வார்களா வென்று சிலர் ஐயங் கொள்கின்றனர். கல்யாண காரியம் இது. பெண்ணும் மாப்பிள்ளையும் நீண்ட ஆயுளுடனிருந்து பிள்ளை குட்டி பெற்று நல்வாழ்வு வாழ வேண்டுமென்பதைப் பெற்றோர் கவனித்தல் வேண்டும். உள்ளே மோசம் செய்வதென்றால் கூட்டத்திற்குக் கேடு சூழ்வதென்பதன்றி வேறன்று. பல்லாயிரக்கணக்கான மக்கள்கூடிப் பேசியகட்டுப்பாட்டைமீறிச்சமூகத்திற்குக்கேடு சூழ எண்ணும் ஒருவர் தண்டனை பெற்றே தீர்வர். அம்மாதிரி செய்ய எவரேனும் முயல்வாரானால் வெளிப்படுத்த வேண்டியது ஒவ்வொரு வருக்குங் கடமையாகும். இம்மாதிரியான திருட்டு வழிகட்கு உதவிசெய்வோர் இருப்பின் அவர் நல்வாழ்வு வாழமாட்டார். தங்கள் திமிரினால் இப்புன்னெறி செல்வோ ரிருப்பின் அவர் வாழ்வு சின்னாளில் பாழாகுமென்பது திண்ணம் என்று ஆயிரக் கணக்கான ஏழை மக்களின் கண்ணீர் தினங் கோறுகூறிக்கொண்டிருக்கிறது.

### இதுவே அநீதம்.

ஒரு பெண்ணிற்கு எவ்வளவு தொகைதான் கொடுக்கலாம். வரம்பின்றி வாங்க நினைப்பது அநியாயமன்றோ? கொடுப்பவர் ஏன் கொடுக்கிறார்? பதின்மூவாயிரம் ரூபா கொஞ்சமானதா? நகை வேறு செய்தல் வேண்டும். கல்யாணச் செலவு வேறு. எல்லாஞ் சேர்ந்து ரூபா பதினேழு பதினெட்டாயிரம் ஆகிவிடுகிறதே. இதற்கு மேலும் எதற்காகக் கொடுக்கிறதோ? பிறந்தபிள்ளை ஆண்டவனருளால் பெண்ணாகப் பிறந்துவிட்டால் கேட்பதற்கு ஒரு எல்லை வேண்டாமா? தடுமாறி ஆண்குழந்தையாகப் பிறந்துவிட்டால் அந்தக் குடும்பம் நாசமாகப்போக வேண்டிய நிலையில் ஒரு சமூகம் வந்துவிட்டதே! பணத்தை எப்படிச் சம்பாதிக்கிறது? எந்தக் குழியிலிருந்து தோண்டியெடுக்க முடியும்? ஆயுள் முழுமையும் சம்பாதித்து ஒரு பெண்ணுக்குத் தானு போட்டமுகிறது. ஐயோ! இதனை ஒரு வழிக்குக் கொண்டுவர இச்சமூகத்திற் பிறந்த ஒவ்வொருவரும் முயலுதல் வேண்டும். முதலில் இந்தப் பதின்மூவாயிரத்தை உறுதி செய்ய முன்வருதல் வேண்டும். அடுத்த கூட்டத்தில் இத்தொகையை இரண்டு வராகனில் கொண்டுவர முயலல் வேண்டுமென்று பலர்கருதுகிறதைபொட்டி இறக்கிவிடவேண்டியது அவசியமாகும்.

### உறுதி வேண்டும்.

இப்போது கூடிய கூட்டம் ஊபயன்கள்கூட்டி வைத்ததன்று. பெரியோர்கள்—செல்வர்கள்—செல்வாக்குள்ளவர்களின் விருப்பப்படியேகூட்டம்நடைபெற்றிருக்கிறது. இதன் நடைமுறையைக் கண்ணுங் கருத்துமாகக் கவனிக்க வேண்டியவர்களில் முக்கியமானவர்கள் அவர்களேயாவரென்று கூற விரும்புகிறோம். அவர்களது அனுமதி பெறாமல் கல்யாணங்கள் நடைபெற முடியாதென்று கூற நாம் தயங்க மாட்டோம். மெதுவாக மழுப்பக் கூடாது. உறுதியாகத் தீர்மானத்தை நிலைபெறச் செய்யும் முயற்சியில்முன்னிற்கவேண்டுமென்று அவர்களைக் கேட்டுக் கொள்வது கடமையாகின்றது. ஏதாவது மோசடியான பேச்சுக்கள் நேரும்போது ஆணித்தரமாகக் கூறவேண்டுவதும் தவறுதலிருக்கிறதென்று தெரிந்தால் அதற்குத் தண்டிக்க முயலவேண்டியதும் செல்வாக்குடையவர்களின் கடமையாகும். சாதாரண ஜனங்கட்கு அநியாயம் செய்[illegible]தென்று தெரிந்தாலும் திட்[illegible]ட்டு அடங்குவார்கள். முன்னின்று காரியங்களைச் சாதிக்க வேண்டுவது வல்லாரின் பொறுப்பாகும். சமூகத்திற்குச் செய்யும் உதவியைவிடவேறென்னதான்செய்யவிருக்கிறது?

## தனவைசிய சமூக ஊழிய சபை அறிக்கை.

க. அங்கத்தினராகப் பலவான்குடி நகரத்தார் வெ. சு. முத்துவள்ளியப்ப செட்டியாரையும், ஆ. முத்துப்பட்டணம் நகரத்தார் பி. சித. சிதம்பரம் செட்டியாரையும், சொக்கநாதபுரம் நகரத்தார் பெரி. முத்து. முத்தையசெட்டியாரையும். கோனாபட்டு நகரத்தார் சு. மு. முருகப்ப செட்டியாரையும், கல்லல் நகரத்தார் பெரி. சுப. கண. நாராயணன்செட்டியாரையும் கொ. இலக்குமிபுரம் நகரத்தார் மு. ராம. இராமநாதன் செட்டியாரையும், உய்யக்கொண்டான் சிறுவயல் நகரத்தார் முரு. சு. குமரப்பசெட்டியாரையும் தேர்ந்து தெரிவித்திருக்கிறார்கள்.

உ. முன் பேச்சுகள்:—பரியாமருதபட்டி நகரத்தார் அ. பழ. பழநியப்ப செட்டியார் மகள் பார்வதிக்கு நாளிது ஐப்பசி மீ ௩௨ கலியாணம் பேசிக் கொண்டதை ௩௦௨ எழுதிவைத்த விவரங்களைத் தெரிவித்திருக்கிறார்கள்.

பலவான்குடி நகரத்தார் பெ. அ. சித. சிதம்பரம் செட்டியார் மகன் சுப்பிரமணியனுக்கும், ராம. கும. பெரி. இளையபெருமாள் என்னும் பெரிய கருப்பன் செட்டியார் மகள் வள்ளியம்மைக்கும் நாளிது ஆவணி மீ ௩௧௨ கலியாணம் பேசிக் கொண்டதை ஐப்பசி மீ ௩௦௨ எழுதிவைத்த விவரங்களைத் தெரிவித்திருக்கிறார்கள்.

கோனாபட்டு நகரத்தார் கு. அ. ப. அரு. அருணாசலம் செட்டியார் மகன் மீனாட்சிக்கு நாளிது௵ஐப்பசிமீ௧௩௨ கலியாணம் பேசிக் கொண்டதை ௨௫ தேதியிலும், சொ. ப. சொ. நாராயணன் செட்டியார் மகன் காசிவிசுவநாதனுக்கு நாளிது ஐப்பசி மீ ௧௨ கலியாணம்பேசிக்கொண்டதையும், சு. மு. சு. பழ. பழநியப்ப செட்டியார் மகன் [illegible]



ப்பனுக்கு நாளிது ஆவணி மீ ௧௩௨ கலியாணம் பேசிக் கொண்டதையும் ஐப்பசி மீ ௨௩௨யிலும், கி. நா. ராம. நாராயணன் செட்டியார் மகன் நாராயணனுக்கும், லெ. சோம. சோமசுந்தரம் செட்டியார் மகள் மீனாக்ஷிக்கும் கலியாணம் பேசிக்கொண்டதை ஐப்பசி மீ ௩௦௨யிலும் எழுதிவைத்த விவரங்களைத் தெரிவித்திருக்கிறார்கள்.

ஒக்கூர் நகரத்தார். சி. கரு. ஆ. கண. ஆதப்ப செட்டியார் மகன் சிந்தாமணிக்கு ஐப்பசிமீ ௧௨ கலியாணம் பேசிக் கொண்டதையும். ராம. சே. சேக்கப்ப செட்டியாருக்கு ஐப்பசிமீ ௰௩௨ கலியாணம் பேசிக் கொண்டதையும், ராம. சே. சேக்கப்ப செட்டியார் தங்கச்சி முத்துக்கருப்பாயிக்கு ஐப்பசிமீ ௰௩௨ கலியாணம் பேசிக் கொண்டதையும் ஐப்பசி மீ ௩௦௨ எழுதிவைத்த விவரங்களைத் தெரிவித்திருக்கிறார்கள்.

சிறுகூடற்பட்டி நகரத்தார் பெரி. மு. முத்துக்கருப்ப செட்டியார் மகள் முத்துக்கருப்பிக்கு ஐப்பசி மீ ௧௨ கலியாணம் பேசிக்கொண்டதை ௧௮௨யிலும், சு. வெ. இராமன் செட்டியார் மகள் உண்ணாமுலைக்கு ஐப்பசி மீ ௬௨ கலியாணம் பேசிக்கொண்டதை ௨௫௨யிலும், ஆ. சு. கு. பழ. சுப. சுப்பிரமணியன் செட்டியார் என்னும் ஆதப்பசெட்டியார் மகள் அலர்மேலுவுக்கு ஐப்பசி மீ ௩௨ கலியாணம் பேசிக் கொண்டதை ௩௦௨யிலும் எழுதி வைத்த விவரங்களைத் தெரிவித்திருக்கிறார்கள்.

உ. சிறுவயல் நகரத்தார் ராம. அ. ராம. வெ. வெங்கடாசலம் செட்டியார் மகன் வெங்கடாசலத்துக்குக் கலியாணம் பேசிக்கொண்டதையும், சித. மெ. மெய்யப்பசெட்டியார் மகன் இராமநாதனுக்குக் கலியாணம் பேசிக் கொண்டதையும் எழுதி வைத்த விவரங்களைத் தெரிவித்திருக்கிறார்கள்.

### மூன்றாவது மாதக் கூட்டம்.

குரோதன௵ தைமீ ௰௨ கார்த்திகையன்று குன்றக்குடி அன்னதான மடத்தில் கூடிப் பேசிக்கொண்டவை.

க. கலியாணங்கள் எழுதி வைத்த விவரங்கள் வந்து சேரவும் அங்கத்தினர்கள் தேர்தல் செய்யவும் முன் குறிப்பிட்டபடி முயல வேண்டியதைப் பற்றி கீழச்சிவற்பட்டி எ. நா. காசிவிசுவநாதன் செட்டியார் பலவான்குடி வெ. சு. முத்துவள்ளியப்ப செட்டியார், நாட்டரசன்கோட்டை சுப. அ. வெ. வெங்கடாசலம் செட்டியார், காரைக்குடி சொ. முருகப்பசெட்டியார் ஆகிய நால்வரும் கவனிக்க வேண்டியது.

உ. பலவான்குடி வெ. சு. முத்துவள்ளியப்பன் மகனுக்கு ஐப்பசி மீ ௧௧௨ காப்புக்கட்டுப் புதுமை நடந்ததில் நகரத்தார் செய்துள்ள ௧௬, ௧௧-வது தீர்மானங்களைத் தான் தெரிந்து கொள்ளாமல் உணவு வகையை மிகுதியாகச் செய்திருந்த போதிலும் பின்னர் தெரிந்து கொண்டு தீர்மானத்தின் படியே நடத்தியதாகச் சொன்னதை நகரத்தார் ஒப்புக்கொண்டிருக்கிறோமென்று பலவான்குடி நகரத்தாரால் எழுதி வந்த கடிதம் படிக்கப் பெற்றுப் பதிவு செய்யப் பெற்றது.

௩. கேத காரியத்தில் பெண்டுகளுக்கு ரூபா ஒன்று வீதம் கொடுத்த விஷயமாய் விசாரித்து அப்படி நடந்திருந்தால் நகரத்தார் கூடி நியாயமாகச் செய்து தெரிவிக்கும்படி செய்யவேண்டியதென்று கீழச்சிவற்பட்டி அங்கத்தினர்களுக்குக் கடிதம் எழுதச்செய்திருக்கிறது.

௪. பலவான்குடிக்கு வெ. சு. முத்துவள்ளியப்பனை அங்கத்தினராகத்தேர்ந்து வந்திருப்பதால் ராம. கு. ராம. இராமசாமியே புதுக்காரியதரிசி நியமனமாகும் வரை பார்த்து வருகிறது.

நாலாவது மாதக் கூட்டம் மாசி மீ ௮௨ வெள்ளிக்கிழமை உதயாதி ௨௨இ நாழிகைக்குக் குன்றக்குடி அன்னதானமடத்திற் கூடப் பெறும். எல்லாவூர்களிலிருந்தும் அங்கத்தினர்கள் வந்து சேர வேண்டியது.

ராம. கு. ராம. இராமசாமி,
காரியதரிசி.

காரியாலயம்—பலவான்குடி.
குரோதன ௵ தை மீ ௧௨௨

## தனவைசியர்கள் சுவாமிக்குப் படைத்தல்.

ஷண்முகநாதபுரத்தில் இளையாற்றக்குடி பட்டண சாமியார் வகுப்பில் ஒரு வகுப்பார் சுமார் ௧௫௦ ஆண்டுகளாக 'சுவாமிக்குப் படைத்தல்'—அதாவது முன்னோர்களுக்குப் படைத்து வந்த பொதுப்படைப்பில் ஆட்டுப்பலி கொடுத்து வந்ததை நிறுத்தி, சைவப் படைப்பாகச் செய்வதாய் அனைவரும் மனமொருமித்து, சென்ற ஒரு வருடமாக பாற் பொங்கல் பழம் வடை பாயசத்துடன் நடந்து வருகிறது. இதுபோல் எம்மனோர்கள் முன்னோர்களுக்குப் பொதுவில் நடாத்தி வரும் ஒவ்வொரு பொதுப் படைப்பிலும், தங்கள் தங்கள் இல்லங்களில் தனித்துப் படைத்து வரும் படைப்பிலும், ஆடு கோழி முதலிய ஜீவ இம்சை செய்யாது சைவமாகவே எல்லோரும் படைத்து வந்தால் படைப்பை ஏற்றுக் கொள்ளும் சுவாமிகளும் வெறுப்பில்லாது நன் மனத்துடன் அன்பாக ஏற்றுக் கொள்ளுதல்கூடும். சில இல்லங்களில் ஏழு எட்டு வருடமாக 'தனது' படைப்புகளைச் சைவமாகப் படைத்து வருவதைக்கண் கூடாகக் கண்டும் வருகிறோம். ஆனால் ஆடு, கோழிகளின் உயிர்களை வதைத்து அவைகளைப் பிதிரர்களாகிய முன்னோர்களுக்கு முன் வைத்துப் படைக்காததினால் எவ்விதமான குற்றமும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. எவ்வகையிலும் உயிர்களை வதைத்துப் பள்ளயம் போடுவதை ஏற்றுக்கொள்ள எந்தச் சுவாமிகட்கும் இனியனவேனும் சம்மதமிராதன்றோ? உண்மையில் சுவாமிகள் நம்மை உயிர்ப்பலி கேட்பதாகவும் தெரியவில்லை. அந்தோ! உயிர்ப்பலி கேட்டுவாங்குவது தெய்வமாகுமா? கேட்டால் அப்படிக் கேட்கும் தெய்வத்தைத் தான் நாம் வணங்கலாமா? முன்னோர்கள் செய்து வந்ததைப் பழக்கம் வழக்கம் என்று கூறி இந்த உயிர்ப்பலியைக் கையாடும் முறையை ஒழித்து இனியாவது எம்மனோர் உண்மைச் சைவ சமயிகளாக விளங்குமாறு நம் குமாரகுருபரன் திருவருள் புரிவாராக. என்று அரு. சித. சு. நடேசன் செட்டியார் எழுதுகிறார்.

## பொருளற்ற செலவு.

நம்மவர்பொருளீட்டுவதில் நிபுணரென்றே சொல்லுதல் வேண்டும். ஆனால் வட்டித் தொழில் ஒன்றிலேயே நம்மவரிற் பெரும்பாலாரும்பழகியிருக்கின்றனர். வேறு வியாபாரங்களில்திறமை மிக்க வணிகக் கூட்டத்தார் உலகத்தின் பலபாகங்களிலுமிருக்கின்றார். நம்மவர் மனைவி மக்கள், பெற்றார், உடன் பிறந்தார், உறவினர் முதலிய யாவரையும் பிரிந்து இரண்டு மூன்று வருடங்களும் அதற்கு மேலும் வெளிநாடுகளில் சென்று தங்கிப் பல இன்னல்கட்குட்பட்டுப்பொருளீட்டுகின்றார். நம்மவரின் பொருள் பெரும்பாலும் அரிதின் ஈட்டியதேயாகும். நம்மனோர் முற்காலத்தில் பொருட் செல்வத்தோடு அறிவுச்செல்வமும் மிக்குடையாராய் விளங்கினார் என்பது நன்கறியப்படுகின்றது. தற்காலத்தில் பின்னையது மிகக்குறைவாகும். அதனால் நம்மவர் பல துன்பங்கட்காளாகின்றார். இலக்குமி நம் சாதியார் மீது நற்கருணை பாலித்திருக்கிறாளென்றே கூறுதல் வேண்டும். எக்காரணத்தினாலோ நாமகள் இந்நாட்டினின்றும் சிறிது காலம் விலகியிருக்கத் திருவுளம் பற்றியிருக்கிறாள். எவ்வளவு பொருளிருப்பினும் நம்மவர் பணக்காரராகப்—புகழுடையோராக மதிக்கப்படுகிறதில்லை. வேறு சாதிகளிற் பதினாயிரம் இருபதினாயிரம் உடையாரும் தற்சுதந்திரமுடையவராக—அறிவுடையோராக மதிக்கப் பெறுகின்றார்; பணக்காரராக மதிக்கப் பெறுகிறார். நம் சாதியில் அவ்வாறு கருதப்படாமைக்குப்பொருளற்ற வீண் செலவே முக்கிய காரணமாகும். பொருளீட்டுவதிற் (காட்டிலும்

பொருள் செலவிடுதலில் அதிகத் திறமை வேண்டும். விசேட காலங்களில் அநியாயமாய்ச் செல்லும் ஆடம்பரச் செலவுகள் ஒருபுறமிருக்க, நம்மவர் விரைவில் ஏமாறக்கூடு மென்பதை நன்கறிந்து கொண்ட பலர் இந்நாட்டிற் குடியேறிப் பொருளைக் கொள்ளை கொள்தல் முக்கியமானதாகும்.

சோதிட நூற்களின் பெயரே இன்னவென்று அறியாத மக்கள் பலர் சோதிடரெனப் பெயர் பூண்டு நாட்டின் பலபாகங்களி னின்றும் ஈண்டுப் போந்து நம்மவரின் பொருளையடிக்கின்றார். சோதிடக்கலை மிக உயர்ந்ததேயாம். அதில் வல்லுநனாக விரும்பும்ஒருவர் தமது வாணாள் முழுமையுமே அவ்வாராய்ச்சியிற் செலவிடினும் அக்கலையின் கரை காண்டல் அரிதாகும். நம் நாட்டில் போலிச் சோதிடர் எதற்கும் முன்னழைக்கப்படுகின்றார். அவர் பொய்யையும் புளுகையும் கட்டிவிட்டு முகஸ்துதி செய்து பணத்தை வாரிச் செல்கின்றார். மேலும் பரிகாரங்களைச் செய்ய வேண்டுமென்று கூறிப் பிராமணர்களைக் கூட்டி வந்து விட்டு அவர்களிடமுங் கமிஷன் வாங்கி வயிறு பிழைக்கின்றார். நம் நாட்டுப் பழைய உயர்ந்த கலைகளெல்லாம் கமிஷன் வியாபாரமாகமுடிந்ததுமிக வருந்தத்தக்கதேயாகும். யார் எது கூறினும் நன்மையா தீமையா என ஆராயாது உடனே கொள்ளும் மக்களின் அறியாமையை என்னென்றியம்புவது!

மந்திரவாதிகள் என்று பலர் இருக்கின்றனர். மந்திரத்தைத் தொழிலாகக் கொண்டாரை நாம் இக்காலத்திலே சிறப்பாக இந்நாட்டிலேயே பார்க்கின்றோம். இழிதொழிலும் தீயொழுக்கமும் அறியாமையுங் கொண்ட அன்னார், மந்திரத்தால் ஒருவற்கு நன்மையும் தீமையும் இழைக்கவல்லோம் எனக் கூறிக்கொள்கின்றார். இதையும் நம்மவர் செவிமடுக்கின்றார். இவர் மாயையில் வீழுவோர் பல்லோர். இவரைக்கொண்டு என்னென்ன செய்யும்படி ஏவவிடப்படுகிறது? ஒருவற்கொரு வியாதி வந்தால் ஒருவர் தம் மனச்சான்றுவழி நடப்பது இடையூறாகவிருக்குமாயின் இவர் அழைத்துயோசிக்கப்படுகின்றார். ஏதோ தகடு மந்திரித்துக்கட்ட வேண்டுமென்றும் எங்கோ யாரோ பில்லிசூனியம்வைத்திருப்பதாயும் அதைத் தம்மாலேதான் எடுக்க முடியுமென்றும் அதற்கு ஆயிரக் கணக்காகச் செலவுசெய்ய வேண்டும் என்றும் கூறுவர். குறிப்பிட்ட இடத்தில் ஏதோ ஒன்றைத் தாமே வைத்துவிட்டு அதை இவர்கள் முன்னிலையில் எடுத்துக் காட்டுவர். பேயை விரட்டுவோமென்பர். உங்கள் குடும்பத்தில் யார் எப்படி யிருப்பினும், அவர்களை நிமிர்த்திவிடுவே னென்பர். இவர் இவ்வாறு பேசி ஏய்த்து நெடுநாளாக உயிர்பிழைத்து வருகின்றார். தனது விரோதியைக் கொல்லவும் இவரை யேவுவாரின் அறியாமையை என்னென்றியம்புவது! இவர் ஈசனா? ஒருவரை ஆக்கவும் அழிக்கவும் இவர் வல்லவரா? என்னே பேதைமை! வேற்றுமதத்தான் ஒருவன் நான் மந்திரவாதி யென்று விபூதி கொடுப்பினும் அதையும் வாங்கித் தரித்துக்கொள்ளும் இவர்தம் அறியாமைதா னென்னே! நாகூராண்டவரைக் கும்பிட்டு விழும் சைவரென்னும் இம்மக்கள் வேறு என்னதான் செய்யமாட்டார்?

பூசாரிக ளென்னும் வெறியாடிகள் செத்தபிணங்களை யெல்லாம் தெய்வமெனக் கட்டிவிட்டு அதற்கு ஒன்றேகால்பணம், இதற்கு ஐந்தேகால்பணம், கோழிப்பூசை, ஆட்டுப்பூசை, சாராயப்பூசை, கள்ளுப்பூசையெனச் சைவமக்களாகிய நம்மிடமிருந்து பொருள் பறித்து, கள்ளிலும் பிற களியாட்டிலும் செலவழிக்க நாம் உடன்படுவதா? எதையெடுத்தாலும் சாமிகுறை; ஆட்டைக் கொல், கோழியைக் கொல்; முட்டையை—கருவைச் சிதை என அவர் கூறும் மொழிகளுக்கும்நாம்செவிகொடுப்பதா? பூசை ஆட்டையும்கோழியையும் கொல்வதிலா இருக்கிறது. இதுவா பூசை? உயிர்ப் பலி வேறு இடுவதா? கண்டதெல்லாம் சாமியா? இதனால் அறிவு குறுகி மூட நம்பிக்கை வளர்கிறது. நாம் யார்? நாம் சைவமக்களல்லவா? சிவபெருமான் இருக்கும்போது இவைகளெல்லாம் என்ன செய்யுமென நினைத்தீர்கள்? கடவுள் ஒன்றே என்பதில் உங்கட்கு நம்பிக்கை யிருந்தால் இவைகட்கெல்லாம் உடன்படுவீர்களா? விபூதி உருத்திராக்கம் பூண்டு நாகூராண்டவர் பேச்சி காட்டான் மேட்டான் புளியமரத்தான் முதலியவைகளையா வணங்குவது? சைவ நன்மக்களாகிய நாம் நமது திருநாவுக்கரசடிகள் அருளியவாறு "நாமார்க்கும் குடியல்லோம்; நமனையஞ்சோம்; நரகத்திலிடர்ப்படோம்; நடலையில்லோம்; ஏமாப்போம்; பிணியறியோம்; பணிவோமல்லோம்; இன்பமேஎந்நாளும்; துன்பமில்லை; தாமார்க்குங்குடியல்லாத்தன்மையான சங்கரன் நற்சங்க வெண்குழையோர் காதிற் கோமார்க்கே நாமென்றும் மீளாவாளாய்க் கொய்ம்மலர்ச் சேவடியிணையே குறுகினோமே" ஆகலின் "அஞ்சுவது யாதொன்றுமில்லை; அஞ்சவருவது மில்லை" என்றன்றோ இறுமாந்திருத்தல் வேண்டும். நக்கீரன் அருளியதுபோல் "உன்னை யொழிய ஒருவரையும் நம்புகிலேன், பின்னை யொருவரை யான் பின் செல்லேன், பன்னிருகைக் கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும் வேலப்பா! செந்திவாழ்வே" என்றன்றோ நெறிபிறழாது நிற்றல் வேண்டும். நிற்க,

ஏமாற்றிப் பொருள்பறிக்கும் இக்கூட்டத்தில் பிராமணரும் சேர்ந்தோரே யாவர். எதையெடுத்தாலும் தம்மையல்லாது ஆகாது என நம்மக்கள் மனத்தில் அவர் நன்கு பதியவைத்துவிட்டார். தாமே உயர்ந்தவரென அவர் வாய்ப்பறை யறைந்து ஏமாற்றுகின்றார். நம்மவர் பிராமணரைக் காணின் அஞ்சி நடுநடுங்குகின்றார். "அந்தணரென்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும்—செந்தண்மை பூண்டொழுகலான்." அருளுடையோரே அந்தணர். பிராமணரென்போர் நம் நாட்டிற் செய்யும் அக்கிரமங்களை என்னென்றியம்புவது? பிராமணர் சோம்பேறிகளாக—வேலையற்றவராக இருந்துகொண்டு நாம் கஷ்டப்பட்டு வெளிநாடு சென்று ஈட்டிவந்த பொருளை மிக எளிதில் கொள்ளை கொள்கின்றார். பிராமணர்க்கு யாசகத்தில் உரிமையுண்டாகிவிட்டது. அவர் இரப்பின் அது இழிவாகக் கருதப்படுதலில்லை. அவர் நம்மவரை அடிமைகொண்டுவிட்டார். தமக்குக் கொடுப்பின் அது தேவப்பிரீதியாமென்றும் தாம் மனிதனல்லவென்றும், தம்மைக் காண்டல் கடவுளைக் காண்டலேயாமென்றும், பிரமாமுகத்தினின்று தாம்குதித்து ஓடிவந்துவிட்டதாகவும் கூறி ஒரு வகுப்பார் மற்ற வகுப்பார்மீது ஆளுகை செலுத்தி வருவது நன்கு கண்டிக்கப்படவேண்டிய விஷயமாகும். சகோதரர்களே! மக்களைத் தீயவழிகளிற் செலுத்தவும் வேலையற்றவர்களாக ஆக்கவும் ஏதுவாய் நீங்கள் கண் மூடித்தனமாய் ஒரு வகுப்பார்க்கே பணத்தை வாரியிறைத்தல் முறையன்று. அது தருமமாகாது தற்காலத்திற் கேற்ற முறையில் கல்விச் சாலைகள் கண்டு, நாட்டின் அறிவை வளர்ப்பதிலும் ஏழைகளுக்கு உதவுதலிலும் சீவகாருணிய நெறியிலும் உங்கள் பொருளைச் செலவிடுங்கள். அதுவே என்றும் நிலைத்த பயன் தரத்தக்க தருமமாகும்.

என்று நம் நாட்டில் இத்தகைய மூட நம்பிக்கைகளெல்லாம் அகன்று அறிவும் தன்னம்பிக்கையும் வளர்ச்சியுறுகிறதோ அன்றே நன்னாளாகும். மேற்கூறிய கோட்டியினரையும் இன்னும் பல வழிகளிற் பொருள்பறிக்கும் வெள்ளை வேட்டிக்காரர்களையும் ஆதரியாத வழியால் அவர்களை சுறுசுறுப்புள்ளவர்களாகவும் ஒழுக்கமுடையாராகவும் மாற்ற வேண்டுவது நமது கடமையாகும்.

சா. நா. சா. அருணாசலன்.

